பகுதி—21

# பாரதி விளக்கம்

ஸ்வாமி ஶ்ரீ சுத்தானந்த பாரதியார்

பாரதி பிரசுராலயம்,
திருவல்லிக்கேணி, சென்னை.



மூன்றும் பதிப்பு] 1948 [விலை அணு 8

முதற் பதிப்பு - 1937
இரண்டாம் பதிப்பு 1944
மூன்றும் பதிப்பு - 1948

பாரதி பிரசுராலயம், P. I. Card No. Ms. 407.
ஹிந்துஸ்தானி பிரசார் பிரஸ், தியாகராயநகர், சென்னை
P. I. Card-154-2-'48.

# கவிக்குயில் நினைப்பு.

---

உன்னை நினைக் கையிலே—எங்கள்
உள்ளத்திலே வீர வெள்ளம் பெருகுது !
வன்ன கவிக் குயிலே—முகம்
வாடித் தவிக்குந் தமிழுக்கு வான்மழை
என்ன இரங்கி வந்தாய்—இருள்
இன்னல் பிளந்தினி அச்ச மில்லையென்றேம்
அன்னை விடுதலைக்கே—பொங்கும்
ஆவேச மின்னெனத் தாவிவந் தாய்—வாழ்க !
(உன்னை)

கண்க ளிரண்டெனவே—வீரக்
காளைக ளோடிளங் காதல் மயிலெனப்
பெண்கள் தலைநிமிர—ஜய
பேரிகை கொட்டியிவ் வூரை யெழுப்பினை
புண்களை மாற்றிவிட்டாய்—பசும்
பொன்னு மணியுங் கனலும் பொலிதமிழ்ப்
பண்கள் பொழிந்ததெல்லாந்—தாய்ப்
பாலென நாடியிற் பாய்ந்து கலந்தன (உன்னை)

வெற்றி முரசடிப்போம்—ஜய
வீர சுதந்தரத் தாயின் மணிக்கொடி
சுற்றி நடமிடுவோம்—நம்மைத்
துண்டு செய் மாயத் துயர்களை யின்றுடன்
எற்றி யெறிந்திடுவோம்—மாந்தர்
எல்லாரும் ஓர்குல மென்று சமதர்மம்
பற்றிமுன் னேறிடுவோம்—சக்தி
பாரதிக் குன்கவி யார மணிகுவோம் (உன்னை)

—சுத்தானந்த பாரதி.

# முன்னுரை

புதுச்சேரியிலிருக்கும் ஸ்ரீ. சுத்தானந்த பாரதியாரையும் அவருக்கு ஸ்ரீ. சுப்பிரமணிய பாரதியார் பாடல்களிலுள்ள பிரேமையையும் அறியாதவர்கள் இல்லை. அவர் இந்த நூலைப் பாரதி பாடல்களுக்கு முகவுரையாக எழுதியனுப்பினார்கள். பிறகு, தனி நூலாக அச்சிடுவதே மேல் என்ற எங்கள் அபிப்பிராயத்தை ஏற்றுக் கொண்டார்கள். ஸ்ரீ. சுப்பிரமணிய பாரதியாரின் பாடல்களின் பெருமைகளை நன்கு அறிந்து அவற்றால் பெறக்கூடிய முழுப்பலனையும் பெறுவதற்கு இந் நூல் இன்றியமையாததாகும். ஆதலால், பாரதி பாடல்களை வாங்கி வாசிப்போர் அனைவரும் இந்நூலையும் அதற்கு அனுபந்தமாகக் கொண்டு வாங்கி வாசிப்பார்கள் என்று நம்புகிறோம்.

பாரதி பிரசுராலயத்தார்.

# பொருளடக்கம்

# பாரதி விளக்கம்

## க. காலநிலை

பொதிகைத் தென்றலில் சங்கக்கொடி ஆடுகிறது; கம்பக் கற்பகம் கலைமணம் வீசுகிறது; மாணிக்கவீணை தேனிசை பொழிகிறது; உள்ளப் பெருமானைப் பள்ளி எழுப்புகிறது. "தேசமுடையாய் திறவேலோரெம்பாவாய்!" என்று கோதைக்கிளி கொஞ்சுகிறது. "நாமார்க்குங் குடியல்லோம்! நமனையஞ்சோம்! நரகத்தில் இடர்ப்படோம்!" என்று திருத்தொண்டர் முழங்குகின்றனர்! இங்குமங்கும் பண்டிதர் செவிமடுக்கின்றனர்.

மற்றெங்கும் இருட் போர்வை; பாழ்பட்ட பழங் கோட்டையில் சவ உறக்கம்; அடிமை, மடமை, வறுமை, வேற்றுமைப் பேய்களின் அழி நடனம்; இப் பேய்களுக்குத் தலைப்பேய் அச்சப்பேய்!

"அஞ்சி யஞ்சிச் சாவார் - இவர்
அஞ்சாத பொருளில்லை அவனியிலே!"

இதுதான் மாந்தர் நிலைமை: அன்னியக் கல்வி, அன்னிய மோகம், அன்னியர் ஆட்சி—மாந்தர் மனம் அன்னிய மாயத்தின் கைப்பாவை!

"கண்ணில்லாக் குழந்தையைப் போல் - பிறர்
காட்டிய வழியிற் சென்று மாட்டிக்கொள்வார்!"

என்ன பரிதாபம்! என்ன வீழ்ச்சி! ஆஹா......! வெல்லம் தித்திப்பை இழந்தால் என்ன செய்வது! ஆண்மை ஆண்மையிழந்து நெஞ்சுலர்ந்து பரதார் மத்திற்கு ஆளானது. பெண்மையோ புகைமூண்டு மட இருளில் அடைபட்டது. பழம் பொய் புது முன் னேற்றத்தைத் தடுத்தது; புதிய தீமைகள் பழைய நன்மைகளைச் செல்லரித்தன. பொய்க் கதைகள் "தத் வமஸி - அது நீ" என்னும் வேத உண்மையை மறைத் தன. எல்லாருள்ளும் கோயில் கொண்ட ஆன்மாவான அறிவுத் தெய்வத்தை மறந்தனர். சாதிமத சாத்திர கோத்திர வகுப்புச் சண்டைகள் வலுத்தன; அந்தர் யாமியின் யாழொலி கேட்கவில்லை. இராமலிங்க சுவா மிகளின் அருட்பா வெள்ளம் பெருகியும் இன்னும் இச்சாதி மத வேறுபாடுகள் ஒழிந்த பாடில்லை; ஒற் றுமை வரவில்லை. அடிமை, மடமை என்னும் ராகு கேதுக்கள் வாழ்வின்பத்தைக் கௌவின. தமிழர் தமிழை மறந்தனர். சுளையுரித்துத் தந்தாலும் சுவைப் பாரில்லை! என்ன சங்கடம்!

## உ. வரகவி வருகை

வந்தாள் புதுயுக சக்தி- வீரக்கனல் விழி; மோகன முறுவல்; இளந் திரு; ஆயிரங் கலை யழகி; அறிவு, ஆற்றல், அஞ்சாமை, ஒற்றுமை, விடுதலை என் னும் பஞ்சப்ராணனைக் கொடுத்து மாந்தரைப் புதுப்

பிக்க வந்தாள்! "வா" என்பார் இல்லை; அறிவார் இல்லை. "இப்படியும் மனிதர் உண்டா?" என்று கன்னத்தில் கைவைத்துத் திகைத்து நின்றாள் சக்தி. அவளது திருவுள்ளத்தை விளக்க வேண்டும்; உறங்கும் நாட்டை எழுப்பவேணடும்; உயிர்க்கனல் மூட்ட வேண்டும்; மன வேறுபாடுகளை ஒழித்து ஒற்றுமைப் படுத்த வேண்டும்; கலியைப் பிளக்க வேண்டும்; ஸத்ய யுகம் மலரவேண்டும். எல்லாம் தமிழ்ச் சொல்லால் நடக்கவேண்டும். அத்தகைய கவிப்ரஹ்மா யார்? நவசக்தி எதிர்பார்த்திருந்தாள்.

"போற்றி போற்றி ஜய ஜய போற்றியிப்
புதுமைப் பெண்ணொளி வாழிபல் லாண்டிங்கே"

என்று ஒரு குயில் அகவியது! ஆ, யாரது? "வந்தாயா! மகனே! கவிக்குயிலே, வா! இளைய பாரதத்தினாய்! தெளிவு மிக்க மதியினாய்! ஒளி இழந்த நாட்டிலே உதய ஞாயிறொப்பவே,—வா, வா, வா! வசந்தம் மலர்ந்தது; இனி அச்சமில்லை, இடரில்லை, இருளில்லை, கட்டில்லை, கவலை இல்லை, எனக் கூவி நாட்டை எழுப்பு. உன் சொல் என் ஜயபேரிகை! ஓம் சக்தி, வந்தேமாதரம் என்னும் இரண்டு மந்திரங்களால் எடுத்த காரியம் வெல்லும்! உன் சொல் சாகாவரம் பெற்று வாழ்க!" என்று நலங்கூறி, முத்தமிட்டு ஆசீர்வதித்தாள் நவசக்தி.

## ௩. சொல் வெற்றி

தமிழ் மந்திரச் சொல்லால் முப்பத்தைந்துகோடி மாந்தரையும் தனது திருவுடலாகக்கொண்ட நாட்டன்னையை எழுப்பினான் வரகவி.

"என்றவளே பள்ளி யெழுந்தருளாயே!"

எழுந்தாள் அன்னை. பொழுது புலர்ந்தது; பொய் யிருள் அகன்றது; சுருதிகள் முழங்கின; தொண்டர் பல்லாண்டு கூறினர்.

"வந்தே மாதரம் என்போம் - எங்கள்
மாநிலத் தாயை வணங்குது மென்போம்!"

அத்தனை தலைகளும் அன்னையைப் பணிகின்றன!

"சுற்றி நில்லாதே போ - பகையே
துள்ளி வருகுது வேல்!
ஓம் சக்தி ஓம் சக்தி ஓம் - பராசக்தி
ஓம் சக்தி ஓம் சக்தி ஓம்!"

பகையரக்கர் நடுங்குகின்றனர்! "நம் ஆவி வேகச் சூழுதே தீ" என்று ஓடுகின்றனர்.

"உச்சிமீது வானிடிந்து வீழுகின்ற போதிலும்,
அச்சமில்லை! அச்சமில்லை! அச்சமென்பதில்
[லையே!"

மாந்தர் மனந் துணிந்தனர்! தடைகள் நொறுங் கித் தவிடு பொடியாயின!

"நாமிருக்கும் நாடு நம தென்ப தறிந்தோம் - இது
நமக்கே உரிமையா மென்ப தறிந்தோம் - இந்தப்
பூமியி லெவர்க்குமினி யடிமை செய்யோம் - பரி
பூரணனுக்கேயடிமை செய்து வாழ்வோம்!"

நாடு தலை தூக்கி நடக்கத் தொடங்கிற்று!

"என்றெம தன்னை கை விலங்குகள் போகும்?"

என்று கட்டுகள் நீக்கி விடுதலைதரும் கண்ணனுக்கு முறையிட்டது! "ஐயமுண்டு, பயமில்லை!" என்று

முன் சென்றது! ஏழை பணக்காரன் என்ற வேறு பாடுகள் ஒழிந்தன :

"ஏழையென்றும் அடிமையென்றும்
எவனுமில்லை ; ஜாதியில்
இழிவு கொண்ட மனிதரென்போர்
இந்தியாவி லில்லையே!"

விடுதலைக்கு ஓர் ஆவேசக்கனல் எழுந்தது!

"மாதர் தம்மை இழிவு செய்யும்
மடமையைக் கொளுத்துவோம்!"

ஆ, பெண் சக்தி விழித்தெழுந்தது!

"பெண்மை வாழ்கெனக் கூத்திடு வோமடா!
பெண்மை வெல்கெனக் கூத்திடு வோமடா!"

என்று பெண்ணின் பெருமை முழங்கியது! இனி ஒற்றுமை!

"ஒன்று பட்டாலுண்டு வாழ்வே"

ஆம், எத்தகைய ஒற்றுமை? உள்ளொற்றுமை; ஆன்மநேய ஒருமைப்பாடு வேண்டும்.

எல்லாரும் ஓர் குலம்! எல்லாரும் ஓரினம்!
எல்லாரும் இந்தியா மக்கள்!
எல்லாரும் ஓர் நிறை; எல்லாருமோர் விலை;
எல்லாரு மிந்நாட்டு மன்னர்!

இம் மந்திரங் கேட்டு, பேத புத்தி நடுங்குகிறது. ஒற்றுமை வெற்றி பெறுகிறது. இந்த ஒற்றுமை 'ஸர்வ ஆத்ம மயம்' என்னும் விசுவாத்ம சேதனத்தை (Cosmic Consciousness) எட்டுகிறது:—

"காக்கை குருவி எங்கள் ஜாதி - நீள்
கடலு மலையு மெங்கள் கூட்டம்;
நோக்குந் திசையெல்லாம் நாமன்றி வேறில்லை;
நோக்க நோக்கக் களியாட்டம்!
ஜயபேரிகை கொட்டடா!"

இவ்வாறு ஒற்றுமை பெற்ற பின், சாதி மதச் செருக்கு புறங்காட்டி ஓடியது. உள்ளத்தில் அன்புக் கனல் எழுந்தது. "ஒரு தாயின் வயிற்றிற் பிறந்தோம்; ஜாதி மதங்களைப் பாரோம்; முப்பது கோடியும் வாழ்வோம்!" என்று நாடு உணர்ந்தெழுந்தது;

"ஏழைய ராகி இனி மண்ணில் துஞ்சோம்!
தன்னலம் பேணி இழிதொழில் புரியோம்;
தாய்த்திரு நாடெனில் இனிக் கையை விரியோம்!
உன்னத ஆரிய நாடெங்கள் நாடே!"

என்ற உறுதி பூண்டது.

"மண்ணி லின்பங்களை விரும்பிச் சுதந்திரத்தின்
மாண்பினை இழப்பாரோ?
கண்ணிரண்டும் விற்றுச் சித்திரம் வாங்கினுற்
கைகொட்டிச் சிரியாரோ?"

அடிமைச் சங்கிலி நொறுங்குகிறது! பட்!

"சொந்த நாட்டிற் பிறர்க்கடிமை செய்தே
துஞ்சிடோம் - இனி - அஞ்சிடோம்!"

படக்! படார்! சங்கிலி சுக்குநூறாக அறுந்தது. பாரதர் தலைநிமிர்ந்து, கை வீசி நடந்து, சுதந்திர வேள்விச் சாலைக்குச் செல்கின்றனர். தாயின் மணிக் கொடியை உயர்த்தி வணங்கினர். ஓம் சக்தி; வந்தே மாதரம்! அகண்டமான தியாக வேள்வி நடக்கிறது!

"எங்கள் வேள்விக் கூடமீதில்
ஏறுதே தீ தீ!"

இந்தச்சுதந்தராக்னி குண்டத்தில் நாட்டன்பர் நாள் தோறும், "விடுதலை! விடுதலை, விடுதலை! ஓம் சக்தி! வந்தே மாதரம்!" என்று ஆகுதி வழங்குகின்றனர். முப்பத்தைந்து கோடி பாரத தேவர்களும் பாரத சக்திகளுடன் பரிபூரண சுதந்தரமாகிய அவியுண்ணக் காத்திருக்கின்றனர்.

## ௪. மந்திரக் கவி

இவ் வீரவேள்விக் கனலைத் தமிழகக் குண்டத்தில் மூட்டியதே கவிக் குயிலின் பெருமை. வேள்வியை வளர்த்தது சொல்; அச் சொல் வற்றாக் கனலருவி! அதன் வீராவேசம் நாளுக்கு நாள் வலுத்து வருகிறது. அக்கனல் மொழி கேட்டு அச்சப் பேய் அலறி ஓடுகிறது; அக்கனல் பட்டதும் அடிமைத் தளை சடசடவென்று முறிந்து விழுகிறது.

"தெய்வக்கனல் விளைந்து காக்குமே—நம்மைச்
சேரு மிருளழியத் தாக்குமே
கைவைத்தது பசும்பொன் னாகுமே—பின்பு
காலன் பயமொழிந்து போகுமே."

இதுவே சொல்லின் ஆற்றல். கலியைப் பிளந்து, இருளைத் துரத்தி, நஞ்சை மாற்றி அமுதமளித்தது சொல்.

"மந்திரம்போல் வேண்டுமடா சொல்லின்பம்!"

அத்தகைய மந்திரச் சொல்லின் இன்பக் கன

ஊற்றே பாரதி. கவிகளிற் சிறந்தது மந்திரக் கவிதை. பாரத சக்தியாகத்தின் மந்திரங்களைத் தமிழில் பாடிய நவயுக வேதக்கவியே பாரதி. பரா சக்தியை நெஞ்சில் நினைந்து நினைந்து உருகிக் கசிந்த அக் கவியூற்று மந்திர அமுதம். அது இறந்த ஜாதியை எழுப்பி உயிர்வளம் ஈந்தது; தீரமீந்தது;

"தோளை வலியுடைய தாக்கி-உடற்
சோர்வும் பிணிபலவும் போக்கி-அரி
வாளைக் கொண்டு பிளந்தாலும்-கட்டு
மாறு வுடலுறுதி தந்து-சுடர்
நாளைக் கண்டதோர் மலர் போல்- ஒளி
நண்ணித் திகழுமுகந் தந்து-மத
வேளை வெல்லு முறை கூறி-தவ
மேன்மை கொடுத்தருளல் வேண்டும்!
ஓம் காளீ, வலிய சாமுண்டீ!"

விவேகானந்த ஜயந்தியன்று பாடிய இந்த யோக சித்திப் பாட்டில் எவ்வளவு வீரக்கனல் கொட்டுகிறது! இதைக் கேட்ட பேடிக்கும் ஆண்மை பிறக்கும்!

"அச்சமில்லை! எல்லாரும் ஓர் நிகர்! வீர சுதந்திரம்! விடுதலை! ஜயமுண்டு, பயமில்லை! ஓம் சக்தி! வந்தே மாதரம்!" இவையே விடுதலை வேள்விக்கு வீரக் கவிக்குயில் அகவிய மந்திர நாதம்!

## ரு. பாரதியார் திருவுரு

தமிழ் நாட்டின் மறுமலர்ச்சிக்கு அரும்பணி புரிந்த வீரருள் பாரதியார் முன்னணியில் நிற்கிறார். தமிழ் நாட்டின் வீர த்யாகிகள் கட்டிய விடுதலைக்

கோயிலின் பொன் மணிக் கோபுரமாக விளங்குகிறது பாரதி வாக்கு. பாரதியார் சிரஞ்சீவி; சாகா வரம் பெற்றவர்; வாழ்வென்னும் வீணையில் அமுதப்பண்களை ஒலித்தார்; மண்ணுடலல்ல; அந்தப்பண்ணுடலே பாரதியார். உயிர்க்குழலில் சக்திநாதம் புரிந்தார்; அந்த நாத சரீரமே பாரதியார். அவர், "பல வேடிக்கை மனிதரைப்போல்" வாழ வந்தவரல்ல.

"நல்லதோர் வீணை செய்தே-அதை
நலங்கெடப் புழுதியி லெறிவதுண்டோ?
வல்லமை தாராயோ-இந்த
மாநிலம் பயனுற வாழ்வதற்கே?"

பாரதியாரின் பிறப்பு, வடிவு, வளர்ச்சி, உயிர்ப்பு, பயிற்சி, முயற்சி, உணர்ச்சி- எல்லாம் கவி வீணை கொண்டு மாந்தர் உய்யும் நித்தியப் பண்களை முழக்கிய பெருமையே. தமிழ்த் தெய்வமே இந்த அன்பனைக் கருவியாகக் கொண்டு தன் அருமை மக்களை விழிப்புறுத்தியது. உடல் நிமித்த மாத்திரமே. கவியின் தங்கப் பேனுவை வீர சக்தியே பிடித்து எழுதினாள். காலச் சிலையில் பதிந்து விளங்கும் அந்தப் பொன் பணியெழுத்தே பாரதியார். தெள்ளமுதத் தமிழூற்று, சக்திக் கனலன்பு, வீர விடுதலைக் காதல், தேசாவேசப் புயல்- இவையே பாரதியார். பிணி வறுமையால் உலர்ந்த அவ்வுடல் அல்ல. கோபுரம்போல நிமிர்ந்து "அச்சமில்லை, தலை குனியாதே, தமிழா" என்று பேசும் அந்த வீரத்திருமுகம் நம் கண்முன் நிற்கிறது; காலன் இழுத்துச் சென்ற காயமல்ல; அறிவும் வீர

மும் பொழியும் அந்தக் கனல் விழிகளே நம்முன் நிற்கின்றன. கருந்தீக் கொழுந்து போல் திருகி விட்டு நிவந்த அந்தக் கெய்சர் மீசையல்ல; அடிமையைக் குமுறத் துடிக்கும் அந்த ஆவேசமே, நம்முன் நிற்கிறது! 'பட பட பட' வென்று காரிடிப் புயல் போலச் சினக்கும் அத் தன்மையல்ல! இந்தப் புயல் பொழியும் கவி மழையே நாம் உள்ளங்குளிரும் வெள்ளம். "ஜயபேரிகை கொட்டடா, கரும்புத் தோட்டத்திலே, முருகா முருகா, எங்கள் முத்துமாரி, ஓம் சக்தி, யோக சக்தி" இப்பாடல்களை அவர் பாடும்போது பார்க்க வேண்டும்! நமது நெஞ்சம் ஜய பேரிகை கொட்டி எழும்! ஆ! அந்த வீர மணிக்குரலைக் கிராமபோனிலாயினும் பிடித்தார்களா! படபடவென்று கோபம் வரும்; ஒரு குழந்தையை மடிமேல் வைத்துவிட்டால் எல்லாம் அன்பாக மாறும்; பிறகு பாட்டு, இடி நகை! ஆ, அந்தக் குழந்தை போன்ற ஸரள சுபாவமே உருக்குகிறது. வெள்ளை மனம்; கபடு சூது தெரியாது; வெளிப்படை; அழகைக் கண்டால் ஆனந்தம்; நல்ல கவிதை கட்டுரைகளைக் கண்டால் பரவசம்; உள்ளுணர்வை வெளியிடாவிட்டால் உறக்கம் வராது. அந்த ரசிகத் தன்மையே பாரதியார். "உடலைப் பந்து போல் ஆக்கவேண்டும்; சிங்கம் போல் இருக்க வேண்டும்; புகையிலைப் பழக்கம் விட்டு, கஸரத் பழக்கம் செய்யவேண்டும்" என்றெல்லாம் ஆயிரந்தரம் சங்கற்பம் செய்வார்; நடக்காது! வ. வே. சு. ஐயர் கர்லா, பஸ்கி எல்லாம் நித்ய கர்மானுஷ்டானமாகச் செய்

வார். அதைப் பார்த்துக்கொண்டு தம் கனவுலகிலேயே இருப்பார் பாரதியார். நாலே பேர் பின் தொடர்ந்து கிரியை முடித்துச் சுட்டெரித்து மூடிய—அந்த உடலல்ல; அதில் கோயில் கொண்ட "சக்தித் தமிழே" பாரதியார். பரமஹம்ஸர் "தாய் தாய்" என்று உருகினர். பாரதியார் "தாய்நாடு, தாய்நாடு" என்று உருகினர், அந்த உருக்கமே பாரதியார் திருவுரு. அவர் வருந்தியதெல்லாம் தமிழர் உய்விற்காகச் செய்த அருந்தவம். அத்தவப்பயனை இன்று காண்கிறோம். "இனி நலம்; தமிழகத்தில் பல பெரியோரும், வரகவிகளும் வருவர். இங்கே தேவர் சங்கம் தோன்றும்" என்று அவர் சொன்னதெல்லாம் பலித்து வருகிறது. தமது மணி வாக்கைக் கொண்டு ஒரு ஸமுதாயத்திற்கே புத்துயிரளித்து எழுப்பிய மஹாகவியே பாரதியார். ஜர்மன் கவியரசான கெதே (Goethe) யின் தெளிவு, ஹோமரின் வீர நடை, ஷெல்லியின் கனவு, பைரனின் இயலாவேசம்- எல்லாம் நமது கவியரசினிடம் காணலாம். ஆனல் இந்த மந்திர சக்தி, சிருஷ்டி வன்மை (Creative Power), ஒரு நாட்டையே விழிப்பூட்டிய வீரக்கனலைக் காண்பதரிது. ஷேக்ஸ்பியர், கம்பன், வர்கிலியன், காளிதாஸன், எல்லாரும் கவி மன்னர்களே. எனினும் கலையுலகை அவர்கள் சிறப்பித்தனர். பாரதியாரின் கவி புதிய தமிழ் சகாப்தத்தை, புதிய ஜாதியை, புதிய நாட்டை அமைத்தது. தமிழில் புது மறைகள் பாடியது. வால்மீகி, துளசிதாஸ், நம்மாழ்வார், சேக்கிழார் போன்ற அருட்கவிகளுக்கே இத்தகைய சக்தி உண்டு.

அகவல், வெண்பா, கலிப்பா, விருத்தம் இத்துறை களில் முழு வெற்றி பெற்றதுடன், சாதாரண நாடோடி மெட்டுகளையும் தமது கவிக் குழலில் இணைத்துச் சிறப்பித்தார் பாரதியார். புதுச்சேரி பாண்டு வாத்தியம், தெருப்பாட்டு, கும்மி, சிந்து, சில் லறை மெட்டுக்களில் தமது உயர்ந்த உள்ளத்தை அமைத்து, பண்டிதர் பாமரர் யாருக்கும் கவியமுத ளித்த பெருமை பாரதியாரின் தனிப்பெருமை.

"விருத்தராதி தானவர்க்கு மெலிவ தின்றியே,
விண்ணு மண்ணும் வந்துபணிய மேன்மை
[துன்றியே,
பொருத்த முறநல் வேத மோர்ந்து
பொய்மைதீர மெய்மை நேர
வருத்தமொழிய வறுமை ஒழிய
வைய முழுதும் வண்மை பொழிய,
வேண்டுமடி எப்போதும் விடுதலை—
அம்மா! அம்மா! அம்மா!"

என்று முறையிட்ட அவரது சக்திவாக்கு உலகின் அற்புதங்களில் ஒன்று. அந்த வீரக் கனலருவியின் மின் சாரத்தில் தமிழர் ஸமுதாய யந்திரம் சுழல்கிறது! வேத முனிவரின் பிறப்பு வளப்பம் அறியோம்; நாத மறைவடிவாகவே அவர்களை அறிகிறோம்; கம்பனும் காளிதாஸனும் கவிவடிவு; அவ்வாறே பாட்டினில் நெஞ்சைப் பறிகொடுத்த பாரதியாரை வீரக்கவிக் குயிலாகக் காண்போம்.

"மனிதவுரு நீங்கிக் குயிலுருவம் வாராதோ?" என்று பாடினார். அந்தப் பொன் பணிக் குயிலாகவே

நம் கவி ப்ரஹ்மாவைப் போற்றுவோம். குயில் வசந்த வனப்பைப் பாடும்; நம் கவிக்குயில் புதிய உயிர், புத்துணர்வு, இளமை பெற்ற புதிய தமிழ் நாட்டைப் பாடினார். பாரதியார் மறைந்து போகவில்லை. இதோ நம்முள், நம்முன், நம்முயிரில் நமது நெஞ்சை அள்ளிக் கலந்த வீரக் காதலில் விளங்குகிறார். தமிழ் உள்ள மட்டும், தமிழகம் உள்ள மட்டும் பாரதியார் உள்ளார். முன்னே லெமோரியாவை உண்ட கடல் இத்தமிழ் நாட்டையும் உண்டாலும், வாழ்க நிரந்தரம், வாழ்க தமிழ்மொழி!" என்றே கர்ஜிக்கும்! தமிழர் உள்ளத்தில் ஆவேச வெள்ளமாகப் பொங்கும். இந்த அமரக் கவியின் தூல வரலாற்றை உலகம் அறிய விரும்புகிறது. தெரிந்ததைச் சுருக்கமாகச் சொல்லுவோம்.

# கவிக்குயில் வரலாறு

## சு. இளமை

இன்றும் திருநெல்வேலி செந்தமிழ்வேலி. எட்டையபுரம் அதில் ஒரு ஜமீன். 1882-ஆம் ஆண்டு, நவம்பர் மாதத்தில் ஆங்கு நம் கவி பிறந்தார். தந்தை சின்னசாமி ஐயர்: தாயார் லக்ஷ்மியம்மாள். 1887-இல் தமது ஐந்தாம் வயதில் தாயை இழந்தார் பாரதியார். சின்னசாமி ஐயருக்கு ஜமீன் சேவகம். ஐயர் கணக்கிலும், யந்திர நுட்பத்திலும் மிக்கவர்; நம் மணியோ நேர் எதிரிடை; அவர் வீரக்காதலுக்கும் கவிதா தேவிக்கும் பிறந்ததாகவே நான் கருதுகிறேன். தந்தை கவி, தாய் கவி, சுற்றம் கவி, கவியே அவருடன் கூடப்பிறந்தது; அவர் கற்றது கல்லாக் கவி. இயற்கவிகள் இருந்து படிக்க வேண்டியதில்லை; அடியும் தலையும்: சீரும் எதுகையும் தடவித் திரிய வேண்டியதில்லை. காரிகைக்கு அவர்கள் கட்டடிமை இல்லை. காரிகை அவர்களைக் காதலுடன் எதிர்பார்த்து நிற்பாள். ஆற்றின் பாட்டிற்கும் காற்றின் பாட்டிற்கும் யாப்பிலக்கணம் ஏது? தட தடக்கும் இடிக்குச் சரளி வரிசை உண்டோ? இளங் குயிலை இசை நுணுக்கம் பிடித்துப் பார்ப்பரோ? ஆர்கலியும், தென்றலும், வெள்ளமும், புட்களும் இயல்பாக, கட்டு மட்டு தட்டுகளின்றித் தமது உள்ளத்தை அமுதாகப் பொழிவது போலவே இயற்கவிகளும் அருளார்வத்

தால் இசையமுது பொழிவர். கற்ற கவியும், அருள் பெற்ற கவியும் பார்த்தால் பளிச்செனத் தெரியும். இந்த இயற்கவிகளில் ஐந்திலக்கணப் பிழைகள் உண்டோ? இரா! ஹோமர், ஷேக்ஸ்பியர், வால்மீகி, காளிதாஸன், கம்பன் இவர்களே உலகின் மஹாகவிகள்; இவர் இயற்புலவர். இவர்கள் உள்ளத்தெழுந்த கல்லாக் கவிதையே புலவருக்குப் பல்கலைச்செல்வமாக விளங்குகிறது. பாரதியார் விருத்தம், வெண்பா, சிந்துகளில் தளைமோனை எதுகைகள் அணுப்பிசகாது பொன்னிற் பொருந்திய மணிபோல் அமைந்துள்ளன. அத்தனையும் முதல்தரமான தங்கக்கவிகள். கல்வியுடன் கடவுளருளும் இருந்தால்தான் கவி மணக்கும். கவி பிறந்தவன்; இயற்கையின் மடியில் வளர்ந்தவன். உலகமெல்லாம் அவன் பள்ளிக்கூடம்.

## எ. கவிதைக்காதல்

இது உண்மை; ஏழு வயதிலேயே அவர் நாவில் கவிதையூற்றுப் பொங்கி எழுந்தது; பதினொரு வயதில் கற்ற புலவரும் மெச்சும்படி கவிபுனைந்தார்; அப்போது (1893) புலவர் கொடுத்த பாரதிப் பட்டமே அவர் பெயருக்கு மகுடமாக நின்று நிலவுகிறது. மற்றப்படி பாரதியாருக்குப் பண்டிதப் படிப்பு இல்லை. ஏனெனில் அவர் காரியம் வேறு; ஒரு பண்டிதர் காரியம் வேறு. திருநெல்வேலி, இந்து கலாசாலையில் நம் பாலபாரதி மூன்றாண்டுகள் படித்தான் (1887-90). நம் இயற் கவிக்குப் பள்ளிப் படிப்புச் சள்ளையாக இருந்தது. கவி நினைப்பு; கவி புனைப்பு; படிப்பு வெறுப்பு.

கானக் குயிலைக் காக்காய்ப் பள்ளிக் கூடத்திற் போட்டாற்போல ஆங்கிலக் கல்வி அருந் தமிழ்க் கவிக்கு ஒத்துக்கொள்ளவில்லை.

"நலமோ ரெட்டுணை யுங்கண்டி லேனிதை
நாற்ப தாயிரங் கோயிலிற் சொல்லுவேன்"

இதுவே திருநெல்வேலிப் பள்ளிக்கூடப் படிப்பிற்கு அவர் வைத்த முத்திரை. நம் பாலபாரதி இளம் ஷேக்ஸ்பியர் போன்று இயல்வளக் காட்சியில் தனித்து உலாவுவார். அதிகமாகப் பேசார்; கேள்விக்கு வெட்டு மின்னல் போலப் பளிச்சென்று பதில் சொல்லுவார். அவர் சொல்லில் நகைச்சுவை குலுங்கும். ஒரு நாள் காந்திமதி நாத பிள்ளை என்பார், "பாரதி சின்னப்பயல்" என்ற ஈற்றடி கொடுத்து, "எங்கே இதை முடி, பார்ப்போம் உனது கவித் திறமையை" என்ருர். "காந்திமதி நாதனைப் பார்; அதி சின்னப்பயல்" என்று விளாசினுன் நம் இளங்கால மேகம்! பள்ளித் தமிழையாவுக்கு இந்தப் பிஞ்சுக் கவியைப் பார்த்தால் பிடிப்பதில்லை. ஏனெனில் தன் பாடங்களை வரகவி கவனிப்பதில்லை. ஒரு நாள் தமிழையா கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லவில்லை. ஐயா இடித்துக் காட்டினுர், "மேகம் போலப் பொழிவதாக ஊரெல்லாம் உம்மைப் பற்றிச் சொல்லுகிருர்களே. காலமேகம் இப்பொழுது பொழியட்டுமே; ஏன் சும்மா இருக்கிறது" என்ருர். ஐயா வாய் மூடு முன்னே நம் கவி சரியான பதிலுரைத்தார். என்ன? "பண்டிதரவர்களுக்கு மேகத்தின் ஸாமான்ய குணமே

தெரியாமல் இருக்கிறதே? காலமேகம் தனக்குத் தோன்றிய போதன்றோ கவி பொழியும்? பிறர் கட்டாயத்திற்காகப் பொழிவதில்லையே?" என்றார். பள்ளிச் சிறாரெல்லாம் நகை மழை பொழிந்தனர்; பண்டிதர் வாயடைத்தது. செந் தமிழறிஞர் சோமசுந்தர பாரதியார் நம் கவியின் பள்ளித் தோழர்.

"வாராய் கவிதையாம் மணிப்பெயர்க் காதலி
வந்தெனக் கருளுதல் வாழிநின் கடனே!"

என்று கவிக் காதலேறித் திரிந்தார் நம் இயலிசைப் புலவர்.

"பிள்ளைப் பிராயத்திலே-அவள்
பெண்மையைக் கண்டு மயங்கிவிட்டேன்-அங்கு
பள்ளிப் படிப்பினிலே-மதி பற்றவில்லை"

என்கிறார்.

பாட்டுக் கட்டுவார்! வெட்டு நடை கொட்டுவார்; பட்டுப்பட்டென நகைச் சுவை தெறிப்பார்; தமிழையே குறிப்பார்; இயற் காட்சிகளில் தம் காதலியைக் காண்பார்:

"ஆற்றங் கரைதனிலே-தனி
யானதோர் மண்டப மீதினிலே-தென்றற்
காற்றை நுகர்ந் திருந்தேன்-அங்கு
கன்னிக் கவிதை கொணர்ந்து தந்தாள்-அதை
ஏற்று மகிழ்ந்தேன்–" அடி
என்னோடி ணங்கி மணம் புரிவாய்" என்று
போற்றிய போதினிலே-இளம்
புன்னகை பூத்து மறைந்து விட்டாளம்மா!"

ஆம், சில காலம் கவிதா தேவி மறைந்திருந்தாள். நம் கவிக்காதலனுக்கு 15 வயதில் (1897) கலியாணம் நடந்தது. 1897–ஜூன்மீ தந்தை காலஞ் சென்றார். தன்னை ஆதரிக்கும் தாயும் தந்தையுமின்றி எவ்வளவோ இடர்ப்பட்டான் சிறுவன். இங்கே ஆதரிப்போரின்றி, காசியில் தன் அத்தையின் பாதுகாப்பில் வளர்ந்தான் (1898-1901). அங்கு ஹிந்தி, ஆரியம்பயின்று கல்கத்தா சர்வகலாசாலை பிரவேச பரீக்ஷை தேறி, 1901-ல் ஜமீந்தார் அழைப்பிற்கிணங்கி எட்டையபுரம் வந்து 1904-வரை சமஸ்தான வேலையில் அமர்ந்தார். யுவராஜா அவர் கவிதையில் மகிழ்ந்தார். ஒரு சமயம் புலவர் வியக்க நம் கவி காவடிச் சிந்து பாடினார். கவியரசன் புவியரசனுக்கு வணங்கான்; சுயக் கவிகளிடம் இந்தச் சுதந்திரக் கனல் கொழுந்தேறும். இக்கனல் அரசர் சலுகையினின்று அவரை விலக்கியது. இத்தகைய கவிகளைப் போற்றத் தமிழ்ச் சங்கமும் இல்லை. 1904-இல் மதுரை சேதுபதிப் பள்ளிக்கூடத்தில் சிறிது காலம் (3 மாதம்) தமிழ் சொல்லிக் கொடுத்தார். பாச வாழ்வு பன்றிக்கு அழகு; வீர வாழ்வே மனிதனுக்கு அழகு; கனியுண் கையில் கல் கடித்தது போலக் கவிதையுண் கையில் இந்தக் கட்டுச் சேவகம் அவருக்குப் பிடிக்கவில்லை. நல்ல காலம் வந்தது. உள்ளே கனன்ற கவிக்கனல் உலகொளிரக் கொழுந்தேற ஒரு தூண்டுதல் பிறந்தது. "வந்தேமாதரம்" என்ற சக்தி மந்திரம் தமிழர் உள்ளத்தை அள்ளியது. பள்ளிக்கூட வேலையை உதறித் தள்ளினார் கவி;

"நமக்குத் தொழில் கவிதை, நாட்டிற் குழைத்தல்
இமைப் பொழுதும் சோரா திருத்தல்"

என்ற மூன்று சங்கற்பத்துடன் தாயின் மணிக்கொடியைத் தாங்கினார். கவிதைக் காதலியை அணுவும் பிரியாது வாழ்ந்தார். அப்போது கவிதா தேவியிடம் அருள், வேண்டினார்: "கவிதையே, என் காதலீ வாராய்! பல நாளாக நின் அருள் முகத்தைக் காணாது வீணானேன்; முன்னாள் நீ என்னை வசப்படுத்தினை. இருவரும் தனித்து இன்பக் கடலாடினோம். சோலையிலே கூடிக் களித்தோம்; குயிலின் தீங்குரல், குளிர் சுனைச் சொற்கள், மலர் விழியழகெல்லாம் உன்னிலே கண்டு, நீயே உயிர், நீயே தெய்வமென வாழ்ந்தேன்; நீ எனக்கு வானமுது. அமுதை அருந்தும்போது ஒரு வஞ்சக் கொடு முள் தைத்தது, என்னை வறுமை துயர்ப்படுத்த வந்தது. அதற்காக ஒரு புன் தொழில் போற்றினேன். ஒரு சிற்றரசன் பணிக்கு இசைந்தேன். பாதகி, நீ மறைந்தாய்; உன் இன்பமெல்லாம் இழந்தேன்.

"ஒரு கதை: ஒரு முனிவன் சாபத்தால் பன்றியானான்; அப்படி மாறும்போது மகனை அழைத்து, 'மகனே, நான் பன்றி யானதும் என்னைக் கொல்லுதல் உன் கடன்' என்றான். அவ்வாறே மகன் கொல்ல வாளோங்கினான். 'ஏடா! நில், நில்! இப்பன்றி வாழ்வே எனக்கு இன்பம். ஆறேழு திங்களாயினும் இந்தப் பன்றியின்பம் அநுபவிக்கிறேன். பிறகு வா' என்றான் பன்றி முனிவன். குறித்த காலத்தில் வந்

தான் மகன். பன்றி தன் காதல் மனைவி, மக்களுடன் ஆடல் புரிகிறது. மகன் வெட்கிப் பன்றியைக் கொல்லப்போனான். முனிபன்றியோ, 'செல்லடா செல்' எனக்கு இவ்வாழ்வே இன்பம் என்றது. மானிடரின் நீசவாழ்வு இவ்வாறு உள்ளது. அவ்வாறே, கவிதைக்காதலீ, நின்னை மறந்து திரிந்தேன். பல பல செய்து பல பல கண்டு துன்பந் துய்த்தேன். மீகானிழந்த கப்பல் போலக் கடலிடையே கடுந்துயர்த் திரைகளால் எற்றுண்டு திகைத்தேன். உலகின் இன்ப துன்பங்களை உணர்ந்தேன். நலந்தீது அறிந்தேன். ஒளியிலா வான், மகிழ்விலா முகம், சுதந்திரமில்லா அடிமை நாடு, சத்தியமற்ற சாத்திரக் குப்பை போன்று என் வாழ்வு இருள் மூண்டது! வெறுப்பு உண்டாயிற்று. உலகைத் துறக்க எண்ணினேன். ஆனால் எனக்கும் துறவிற்கும் வெகுதூரம். அதற்கு ஏற்ற பரிசுத்தம் என்னிடமில்லை. பித்தம் பிடித்தவன் உணவை வெறுத்தால் விரதியாவானோ? மற்ற மனிதரைப் போலப் பொறிவழியே உண்டுறங்கிச் சிற்றின்ப வாழ்வு வாழ்விலும் எனக்குப் பிரியமில்லை. ஏதாவது நல்ல வழியில் கிளர்ச்சி செய்யலாமெனவே எண்ணினேன். கவிதையே, நின் காதலை நினைத்தேன்; உளஞ்சிலிர்த்தேன்; அணிமணிக் குயிலே, நின் புன்னகை, மலர்விழி, தெள்ளமுதச் சொல், நின் பரிசத்தால் உண்டாகும் புளகம்பெற்று, மீண்டும் உன்னைச் சரணடைந்தேன். என்னைக் காப்பாய்.

> நின்னரு ளில்லேல் நிலமிசை வேறோர்
> பற்றுமில் லாதிப் பாவியேன் மடிவேன்.

கம்பன், இளங்கோவடிகள், காளிதாஸன் பெரியோருக்கு உன் முழு மனமும் தந்தனை. அத்தனை உயர்வு எனக்கு அளித்திட. ஒவ்வாதெனில் அதில் பேராசை கொள்ளவில்லை. உன் களிச்சொல் ஒன்று அருள், போதும்; உன் குளிர் மலர் விரலால் எனது சிரத்தைத் தைவரல் செய்; போதும்.''

அன்றுமுதல் கவிதா தேவி அன்பன் நாடிகளில் வீரசுதந்தரகானம் செய்தாள்.

## அ. பத்திரிகைத் தொழில்

நம் தமிழன்னையின் மற்றொரு மாணிக்கமாகிய ஜீ. சுப்பிரமணிய ஐயர் தமது சஞ்சிகைச் சுடரான சுதேசமித்திரனுக்குத் துணைசெய்யப் பாரதியாரை அழைத்தார். தேவி வழிதிறந்தாள். அன்று முதல் பாரதியாரின் பொன்னெழுத்தாணி வீரக் கனலமுது உகுக்கத் தொடங்கியது. கல்லாகச் சபிக்கப் பெற்றவன் உயிர் பெற்றெழுந்த மாதிரி களித்தார்; நெடுநாட் சிறையுண்டவீரன் விடுதலை அடைந்ததும் ஓர் அறப்போர் எதிர்ந்ததுபோல் மகிழ்ந்தார். கவிக் காதலியுடன் தாய்த் தொண்டு புரிந்தார். நல்ல தேச வீரராகிய திருமலாசாரியார் நடத்திய ''இந்தியா''விற்கு ஆசிரியராகி, தமிழ் நாட்டில் இந்தியத் தாயன்பைப் பற்றவைத்தார்.

## கூ. இந்தியா

'இந்தியா'வே பாரதியார் திருவுள்ளம். 'வந்தே மாதரம்,' 'இந்தியா' இரண்டும் வீரசுதந்தர பேரிகை கொட்டின. இங்கே வாய்ச் சிலம்பும் அங்கே சர்க்கார் சலாமும் போடும் நிதானக் கட்சியாருக்கு ஹாஸ்யச் சவுக்குக் கொடுத்தது "இந்தியா"! ஸ்வதேசி, ஸ்வராஜ்யம், நாட்டுக் கல்வி, தொழில், உடற் பயிற்சி முதலிய அரும் பணிகளுக்கு ஆக்கமளித்தது "இந்தியா"! முதல் முதல் படத்துடன் வெளிவந்த பத்திரிகை "இந்தியா" தான். படமா? நாட்டு நிலைமையை விளக்கி வீரவழி காட்டும் சித்திர வாசக மன்ருே இந்தியாவின் முகப்பை அலங்கரித்தது! தேச பக்தி என்னும் சூரியன் உதிக்கிறது; மிதவாத ஆந்தைகள் ஒரு மரப் பொந்தில் ஒளிகின்றன! "கன்வென்ஷன்" என்ற வெம்புலியைப் பசுத்தோல் போர்த்து, மிதவாதி பாரத மாதாவிடம் விலை கூறுகிருன். 'இதுவா பசு!" என்று சவுக்கால் அடிக்கிருள் அன்னை இவ்வாறு அரிய சித்திர விளக்கம் "இந்தியா"வை அலங்கரித்தது. அதன் தலையங்கங்களே புதுப் புதுச் சித்திரங்கள்.

## க௦. பணி

**பாட்டுப்** போலவே பாரதியார் உரை நடையும் தெளிவும், ஒளியும், திருவும் பொருளும் வாய்ந்து, தமிழுக்கே ஒரு புத்துணர்வும் புதுப் பிறப்பும் அளித்தது. அன்னை என்ருல் அன்புக் கனல் பிறக்கும். அன்னை நாட்டில் ஆவேசங் கொள்ளாத கல்லும் உண்டோ? தமிழுக்கும் இந்தியத் தாய்க்கும் பாரதி

யார் தம் வாழ்வைப் பலிதானமாக்கினார். சக்தி எழுப்பும் தந்தை நாடும், தேனென இனிக்கும் செந்தமிழ் நாடும், வானம் அளந்ததனைத்தும் அளந்திடும் வண்டமிழ் மொழியின் அமுதச் சுதையும் ஆர்வமுடன் கூறி,

"தேமதுரத் தமிழோசை உலகமெலாம்
பரவும் வகை செய்தல் வேண்டும்"

என்று தமிழரை எழுப்பினார். "சிறந்து நின்ற சிந்தையோடு தேயம் நூறுவென்று, அன்னை வெற்றி கொள்கவே!" என்று பாரத தேவிக்கு வாழ்த்தெடுத்தார். மனத்தில் உறுதி, வாக்கில் இனிமையுடன் வீர சுதந்திர தேவியைத் தொழுது,

"விண்ணி லிரவிதன்னை விற்றுவிட் டெவரும்போய்
மின்மினி கொள்வாரோ?
கண்ணிலு மினிய சுதந்திரம் போனபின் கைகட்டிப்
பிழைப்பாரோ?"

என்று உறங்கும் தமிழரை உறுத்தி எழுப்பினார்.

ஐரிஷ் அறிஞரான ஜயராம் கஸின்ஸும் பாரதியார் பாடலை மிகவும் போற்றியுள்ளார். 1907-இல் பாரதியார் நஞ்சுண்டராவுடன் சென்று விபின சந்திர பாலரை சென்னைக்கு அழைத்துவந்தார்.

அக்காலம் தமிழ்ப் புலமைபெற்ற வீரர் சிதம்பரம் பிள்ளை திலகர் வழி பற்றி, சுதேச இயக்கத்தைத் தொடங்கினார். திருநெல்வேலியை மற்றொரு வங்காளம் போல, தேசாவேசத்துடன் எழுந்து நிற்கச் செய்தார் நம் செந்தமிழ்த் திலகர். சுப்பிரமணிய

சிவாவின் பேச்சு, பாரதியார் பாடல், சிதம்பரம் பிள்ளையின் வீராவேசப் பணிகள் - இம் மூன்றும் தமிழருக்குப் புத்துயிரீந்தன. தூத்துக்குடி மில் வேலை நிறுத்தத்திற்குப் பிறகு, சிதம்பரம் பிள்ளையை அரசாங்கத்தார் சிறையிட்டனர். அக்காலத்தில் கலெக்டர் விஞ்சிற்குச் சிதம்பரம் பிள்ளை கூறிய வீர மொழியை நம் கவி அழகாகச் சித்திரித்தார். தேச பக்தனுக்கு ஆங்கிலேயன் கூறுவது, ஆங்கிலேய னுக்குத் தேசபக்தன் கூறும் மறுமொழி போன்ற காவடிச் சிந்துகளும், நந்தனர் கீர்த்தனை மெட்டில் நிதானக் கட்சியாருக்கும் தேச பக்தருக்கும் உள்ள மனப்பான்மையை விளக்கும் பாக்களும், வி. கிருஷ் ணஸ்வாமி ஐயர் மனத்தைக் கவர்ந்தன. அவரே முதல் முதல் பாரதியாரின் பாடல்களை வெளியிட்டுப் பரவச் செய்தார்.

## கக. புதுவை யகல்

திலகர், சிதம்பரம் பிள்ளை, அரவிந்தர், பாலர், லஜபதி முதலிய வீர சிகாமணிகள் தாயின் தளைய விழ்க்கத் தளராது உழைத்தனர். அடக்குமுறைகளும் புயல்போல் எழுந்தன. 1908-இல் இந்தியா பத்தி ரிகை அச்சுச் சட்டத்தால் அடக்கப்பட்டது. பார தியார் புதுவை புகுந்தார். புதுவையில்தான் நம் புது யுகப் பாவலர் தம்மைப் பிரியாத கவிக் காதலியுடன் வித விதமான இன்பம் துய்த்தார். அக்காதலின் பத்தில் கொஞ்சிய ஒவ்வொரு முத்தமும் முத்து மலர்க் கவிதையாகித் தமிழ்த் தென்றலுக்குப் புது மண மேற்றியது.

## கஉ. அரவிந்தரும் பாரதியும்

மற்றெரு தெய்விகச் சுடர் பாரதிக்கு வீரக் கனலும், ஞானவொளியும், சக்திப் பெருக்கும் கொளுத்தியது. அதுவே சத்திய யுகக் கதிரான ஸ்ரீ அரவிந்தர். வடக்கே 'வந்தே மாதரம்,' தெற்கே 'இந்தியா.' 'வந்தே மாதர'த்திற்கு மந்திர சக்தி அளித்து, பாரதத் தாயின் பொன்னுருவை இந்தியர் மனக் கோயிலில் நின்று நிலவச் செய்த பெருமை ஸ்ரீ அரவிந்தருக்கே உரியது. பின்னே நடந்த நாட்டியங்களெல்லாம் 'வந்தே மாதர'த்தின் எதிரொலியாகும், அதைப் பின்பற்றியே 'இந்தியா' வீரத் திருவோங்கி, சுதந்தர விண்ணிற் பாய்ந்தது. திலகர் அரவிந்தரின் வீர நடைக்கேற்ப, நம் கவிக்குயிலின் ஆவேசமும் பொங்கியது. வீர விளக்கான வ. வே. சு. ஐயர் லண்டனிலிருந்து வார வாரம் இந்தியா பத்திரிகைக்கு உணர்ச்சி ததும்பும் கட்டுரைகளை எழுதிக் கொண்டிருந்தார். பாரதியார் மாசற்ற வீர சுதந்தரத் தூதர்; மிதவாதம், வெளவால்தனம், காக்காய் பிடித்தல், கரடி ஓட்டல் முதலிய வியாபாரங்களுக்குப் பளிச்சுப் பளிச்சென்ச் சவுக்கடி கொடுப்பார். நெஞ்சி ஊரமற்ற "அச்சமும் பேடிமையும் அடிமைச் சிறுமதியும்" அவர் பேனவை வைரவாளென அஞ்சி அப்புறஞ் செல்லும். துஞ்சும்பொழுதும் நெஞ்சகம் தாயிடம். தாயின் மணிக் கொடியைப் பாரதியார் தமது பேனு முனையில் தாங்கினர். சொல்லுக்கு வெற்றி உண்டு. உரை உலகாளும்; கவி புவி வெல்லும்; ஆம், வென்றது. அரவிந்தர் சொல்லும், பாரதி பாடலும் நாட்டை ஆளுகின்றன.

## கரு. சூரத் காங்கிரஸ்

மிதவாதிகள் ஜோடித்த சூரத் காங்கிரஸ் நாட கத்திற்குச் சிதம்பரம் பிள்ளை, பாரதியார் முதலானோ ரும் சென்றனர். ஏன்? தேச பக்தர்களான திலகர் அரவிந்தர் கட்சியை வலுப்படுத்தவே. தேசபக்தர் சத்திய வீரரான லாலாஜீயைத் தலைவராகத் தேர்ந் தெடுத்தனர். 'அவரா...... அப்பாடி இ!'' என்று பயந்து மிதவாதிகள் ரஸவிஹாரி கோஷைத் தேர்ந்தனர். ரஸவிஹாரி ரஸமான இலக்கியம் ஒன்றைத் தயாரித்து, மதிப்பாகப் பிரசங்கம் பண் ணலாமென்று வந்தார். மிதவாதிகள் பேச்சுப் புலி கள். நாடு விரும்பும் சுதேசி, ஸ்வராஜ்யம், வர்ஜனம் என்றால் மிதவாதிகளுக்குக் கிலி. திலகரின் தீரமான சுதந்தர வேகத்திற்கு நிதானக் கட்சி முட்டுக்கட்டை போட்டது. கானுட்டுக் கோமான் (Canute) மாதிரி தேசாவேசக் கடலின் ஓரத்தில் மதிப்பாக அமர்ந்து, "வீரத் திரைகளே, எம்மை அறியுங்கள்! எங்கள் ஆடைமேல் துமி தெறிக்காது அடங்குங்கள்!'' என் றனர் மிதத்தலைவர். நடக்குமா? "இந்தத் தேசா வேசத் திரைகள் மனித சிருஷ்டி இல்லை; அவை கட வுளின் ஆணை'' என்றார் அரவிந்தர். இந்த நிதானக் கூட்டத்தை உடைத்தெறியக் கச்சை கட்டினார் பாரதசிங்கம் திலகர். ராஜவாழ்த்து முழங்க, சுரேந் திரர் புகழ (இங்கேயே கலாட்டா ஆரப்பித்து விட் டது), ரஸவிஹாரி தலைமையுரையைத் தொடங் கினார் :—ஏக ரகளை, புடல், இடி, ஸ், ஸ்ஸ—டடடட ஹோ, No, No, Sit down! வேலை பார்த்து ரஸவி

ஹாரி, "Brother delegates—My first duty is" என்று தொடங்கினர்! ஹிஸ்ஸ்ஸ்ஸ்! டப்டப்டங்! புயல், இடி! First dutyயோடு காங்கிரஸ் சரி. திலகர் சிம்மம்போல் எழுந்து நின்றார்; "தலைவரை ஒப்புக் கொள்ள மாட்டோம்" என்றார். "I declare you out of order" என்று உறுமினர் தலைவர் பானர்ஜி, கோகலே, மேதாக் கூட்டங்கள்! "உமக்கு இங்கு வாய் இல்லை; இந்த தலைவரை நாங்கள் ஒப்பவில்லை. நான் தேசப் பிரதிநிதிகளுக்குப் பேசுகிறேன்!" என்று கர்ஜித்தது பாரத சிம்மம். மிதவாதிகளுக்கு ஆத்திரம்! தேசபக்தர்களும் விடாமுண்டர்! ஏகரகளை! இதனிடையே அதோ ஒரு மராட்டியச் செருப்பு விர்ர்ரென்று பறந்து, சுரேந்திர நாதர் கன்னத்தில் ஓர் அடி போட்டு, மேதாவையும் முத்தங் கொஞ்சியது! உடனே யுத்தம்! ஸ், புஸ், பட்! தடியடி, நாற்காலிப் பூசை, வசவு, திட்டு, டைாய், ஹல்சல், ஆந்தோளன்! போலீஸ் புகுந்து, சமாதானமாக ஆட்களை வெளியேற்ற வேண்டியிருந்தது. இவ்வளவு வரிசையுடன் சூரத் காங்கிரஸ் உடைந்தது. மிதவாதிகள் சபித்தனர். தேசபக்தர் அரவிந்தர் தலைமையில் கூடினர். திலகர் ஸ்வராஜ்ய தத்துவத்தைப்பற்றிப் பேசினர். அக்கூட்டத்தில் பாரதியாரும் கலந்து கொண்டார். அதன் பிறகு இந்தியா பத்திரிகையில் பார்க்க வேண்டுமே! மிதவாதிகளுக்கு நல்ல சவுக்கடி! ஸ்வராஜ்யம் சுதேசியம் என்றால் அஞ்சும் மிதவாதிகளின் அமிதம், அரசாங்கத்தின் அடக்கு முறை- எல்

லாம் பொறுத்து, தேசபக்தர் அக்காலத்தில் தளராது பிடித்த நாட்டுக் கொடிதான் இன்று பறப்பது.

*1909*-இல் "இந்தியா" பிரிட்டிஷ் எல்லையில் வரக் கூடாதென்று தடை செய்யப்பட்டு, பாரதியாரின் உள்ளத்திலேயே அடங்கியது. அதன் பின் அரவிந்தர் நடத்திய அரிய ஞானவீர மலராகிய "கர்மயோகி" யைத் தமிழில் மொழிபெயர்த்துச் சில காலம் வெளியிட்டார் பாரதியார்.

## ௧௪. புதுவை வாழ்வு

**1910**-இல் ஸ்ரீ அரவிந்தர் யோக சித்திக்காகப் புதுவை புகுந்தார். அரவிந்தர் உறவினால் பாரதியார் கவிதையில் ஒரு ஞான சக்திக் கனலேறியது. சக்திப் பாட்டு, வேள்விப் பாட்டு, முருகன் பாட்டு, கண்ணன் பாட்டு முதலியன பேரின்பச் சுடர் மணிகளாக வெளி வந்தன. அரவிந்தரிடம் பாரதியார் பேரன்பு பூண்டிருந்தார்.

"ஆடு பாம்பே-எழுந்-தாடு பாம்பே
அன்னை துயில் நீங்கநலந் துன்னு பாம்பே!
உண்மை நிலை கண்டுறங்கும் யோகப் பாம்பே!
உலகத்தைச் சமன் செய்ய எண்ணு பாம்பே!
திண்மை நிலை கொண்டிருக்குந் தெய்வப் பாம்பே!
தெய்விகத்தைக் காட்டுதற்குத் தீவிரங் கொள்வாய்!
ஆதிசிவன் மேலிருக்கும் நாகப் பாம்பே-எங்கள்
அரவிந்தப் பேர்புனைந்த அன்புப் பாம்பே!
ஜோதிப்படந் தூக்கிநட மாடி வருவாய்-அந்தச்
சோலைநிழ லாலெமது துன்ப மொழிவோம்!"

என்று அரவிந்தரைப் போற்றுகிறார். கண்ணன் பாட்டை அன்பர் நுட்பமாக ஆராய்ந்தால், இந்த உண்மை விளங்கும். "இங்கே தேவர் சங்கம் கூடும், கிருதயுக மெய்தும், விண்மண்மிசை விளங்கும்; புவி மீதினிலே புது வாழ்வுறும். சக்தி விளங்கும்" என்னும் அரவிந்தக் காட்சிகள் பாரதியார் கவிதைகளில் மிளிர்கின்றன. மோகத்தைக் கொன்று, யோகத்தில் நின்று பந்தனை நீக்கி, சிந்தனை தெளிந்து, உள்ளமுருகி, ஊனமொழிந்து பராசக்தியின் கருணை வெள்ளத்தை அள்ளிப் பருக அவர் மனம் அனவரதமும் துடித்தது. குள்ளச்சாமி என்ற ஓர் அரியஞானி புதுவையில் இருந்தார். இவரால் பாரதியார் பெற்ற ஞானப் பயன் மிகப் பெரியது. "பாரதி அறுபத்தாறு" குள்ளச்சாமியின் திருவுள்ளமே. இச்சாமியாரின் பூர்வவரலாறு யாருக்கும் தெரியாது. அவர் உயர்ந்த ஞான சித்தர், பரமஹம்ஸயோகி என்பதில் தடையில்லை. பாரதியார் புதுவையில் 10-ஆண்டுகள் இருந்தார்கள்.

வறுமை, வறுமை, வறுமை! புலவரைப் பற்றும் பொல்லா வறுமை! பாரதியாரின் தூல வாழ்விற்கு இவ்வாறு சாப்புக் கொடுக்க வேண்டியிருக்கிறது. வறுமை வறுமை! ரத்தக் கண்ணீர்! குடும்பமும் குழந்தையும் குட்டியுமாக அவர் பட்ட இடர்கள் சொல்லி முடியா. கவிக்காதலி ஒரு கன்னத்தில் கொஞ்சுவாள்! நாட்டைப்பற்றியது போதாதென்று நல்லோரையும் பற்றிப் பிடுங்கியெடுக்கும் வறுமைப் பேய் மற்றொரு கன்னத்தைக் கிள்ளும். உள்ள மட்டும் அன்னையிடம் ஈடுபட்டிருக்கும்.

வறுமையாயினும் வண்மை மிகுதி! மனது வெகு தாராளம்! உலகின் சூது விநயம் செட்டுக்கட்டெல்லாம் தெரியாது; நாளைக்காகச் சேர்க்கத் தெரியாது. இன்று ஒரு ரூபாய் வந்தால் அப்படியே செலவு; வந்தவர்களை முகமலர்ந்து உபசரிப்பார். காரசாரமாகச் சாப்பிடுவார். தோசை பலகாரங்கள் உண்ணும் போது பட்சிகளை அழைத்து, அவற்றிற்கும் போட்டு, அவற்றின் இன்பத்தை அநுபவிப்பார்.

"விட்டு விடுதலை பெற்றிருப்பாய்-இந்தச்
சிட்டுக் குருவியைப் போலே!"

என்று ஷெல்லி போலப் பாடுவார். படக்கென்று சினப்பார்! பக்கென்று சிரிப்பார்! "மஹாசக்தி, உன்னிடம் அமரத்தன்மை கேட்கிறேன். என்னை மனக் கவலையின்றி விடுவிக்க வேண்டும்; ....பணம் இல்லாதது பற்றியே கவலைப்படலாமா? மூடா; மூடா; மூடா! அச்சத்தைப் போக்கு!" என்பார். பாரதியார் குடும்ப வாழ்வு ஒரு பெரிய ரஸ மஞ்சரி.

## கரு. சிந்தனை

பாரதியார் உடல் குடும்பத்தில்; உள்ளம் சக்தி வானில் வட்டமிடும் சுதந்திர வானம்பாடி; உயிர் கவிக் காதலியைப் பிரியாது:

"சித்தந் தளர்ந்ததுண்டோ?—கலைத்
தேவியின் மீது விருப்பம் வளர்ந்தொரு
பித்துப் பிடித்தது போல்-பகற்
பேச்சு மிரவிற் கனவும் அவளிடை

வைத்த நினைவை யல்லால்-பிற
வாஞ்சை உண்டோ? வய தங்ஙனமே இரு
பத்திரண் டாமளவும்-வெள்ளைப்
பண்மகள் காதலைப் பற்றி நின்றேனம்மா!"

வறுமைக்கு மருந்து சக்திக் காதல். "அன்னையே, உன் சரண். என்மேல் நீ அன்புகொள். அமரர் போல, வாழ்வேன்; நின்மேல் இசைகள் பாடி மகிழ்வேன் நான் உன் கணவன். என்னை நாணி ஏகலாமோ? நான் கண்ணன் கருவி; அருள் புரி. மனத்தில் உறுதி, வாக்கில் இனிமை, நல்ல நினைவு, நினைத்த வெற்றி, தனம், இன்பம், பெருமை, அறிவு, காவியம், பெண் விடுதலை, கடவுள் துணை, மண் வளம், உண்மை, அச்சமின்மை-எல்லாம் அருள்" என்று கூசாமல் சக்தியை வேண்டுவார்.

"அடியார் பலரிங் குளரே-
அவரை விடுவித்தருள்வாய்!
புதுவாழ் வுறவே புவிமீ தருள்வாய்"

என்று முருகனை வேண்டுவார்.

தெய்வபக்தியினால் இகபர ஸாதனங்கள் எல்லாம் பெறலாம் என்பது கவியின் உறுதி. மோக்ஷ சுகத்துடன் போக சுகமும் கூசாமல் கேட்பார்:— "திருமகளே, உன்மேல் மெத்த மையல் கொண்டு விட்டேன்."

"செல்வ மெட்டு மெய்தி-நின்றன்-
செம்மை யேறி வாழ்வேன்
இல்லை என்ற கொடுமை-உலகில்
இல்லையாக வைப்பேன்.

முல்லை போன்ற முறுவல்-காட்டி
மோக வாதை நீக்கி
எல்லையற்ற சுவையே-எனை நீ
என்றும் வாழ வைப்பாய்!''

என்று திருமகளைக் காதலித்து அஷ்டைச்வர்யமும் வேண்டுவார்.

கூடுந் திரவியத்தின் குவைகள்—திரள்
கொள்ளுங் கோடி வகைத் தொழில்கள்—இவை
நாடும் படிக்கு வினை செய்து—இந்த
நாட்டோர் கீர்த்தியெங்கும் ஓங்கக் —கலி
சாடுந் திறனெனக்குத் தருவாய்—அடி
தாயே உனக்கரிய துண்டோ—மதி
மூடும் பொய்மை யிருளெல்லாம்—எனை
முற்றும் விட்டகல வேண்டும்.
வையத் தலைமை எனக் கருள்வாய்—அன்னை
வாழி நின்னதருள் வாழி!''

இவைதாம் பாரதியார் இறுதியில் கர்ஜித்த ஆவேசப் பாட்டு!

ஆ! இந்தத் தீர்க்க தரிசனம் நிறைவேறுகிறது, நிறைவேறும், நிறைவேறிற்று. இதுவே பாரதியார் பாடலின் முத்தாய்ப்பு! இந்தப் பொன்மொழிச் சுடரை வறுமை மேகம் மறைத்துக் கலக்கிய கொடுமை என்னே! இக்காலம் நாட்டுச் சேவகம் எளிது! நாட்டன்பர் பெருமையை நன்குணராத அக்காலம் முள் மேல் நடந்தன்றோ இந்த ஆதி வீரர்கள் அன்னைக்கு உழைத்தனர். புதுவை புதிது. சுற்றும்

கண்ணுறங்காக் காப்பு, காவல்; குடும்பச் சுமை; பொது மக்களின் ஆதரவு ஏறக்குறையப் பூஜ்யம். "சுதேசி" என்றால் அஞ்சுவார். அந்நாள் ராணா பிரதாபஸிம்ஹன் பட்ட கஷ்டமெல்லாம் இந்தத் தேசபக்தர்கள் பட்டனர் என்பது மிகையல்ல. ஐயரும், பாரதியும் தமிழ்நாட்டின் வீரச் சரிதையில் பொன்னெழுத்தாற் பொலியும் நன்மணிச் சுடர்கள்! வறுமைச் சிலுவையிலிருந்து இவ்வீரர்கள் நாட்டிற்கு உழைத்தனர். புதுவையிற் புகுந்த தேச பக்தருக்கு விடுதலை கிடைத்ததும், 1919-இல் பாரதியார் குடும்பத்துடன் கடையம் வந்தார். இடையில் டாணாக்காரர் பிடித்து, பிறகு விடுதலை செய்தனர். 1920-இல் மீண்டும் சுதேசமித்திரன் வேலை. சென்னையில் தம்மைப் படையெடுத்த வறுமையின் கொடுமையை "ஞானரத"த்தில் சித்திரிக்கிறார். புதுவையை விட்டானதும், சிறு சிறு கதைகளாலும், சிங்காரக் கட்டுரைகளாலும் பாரதியார் தமிழ்ப்பணி புரிந்தார். இந்நாட்களில் உடலை மறந்த உள்ளுலகில்தான் பாரதியார் நிலைத்து உலாவினார்; உடல் எலும்பாக இளைத்துப் போயிற்று. இருந்தாலும் வாய் ஜயபேரிகை முழக்கியது. திருவல்லிக்கேணிக் கோயிலை அடுத்த மண்டபத்தில் அடிக்கடி கூட்டம் போட்டுப் பாடுவார். 11-9-21-இல் கடலலைகளும் அடங்கிக் கேட்கும் படியாக, "பாரத சமுதாயம் வாழ்கவே!" என்னும் சமரஸ வேதத்தை முழக்கினார். சர்வாத்ம ஸமரஸமே பாரதி பாடலின் உயிர். பார்த்தசாரதி கோவில்

யானைக்கு விளாம்பழம் கொடுத்தார். அவரது ஆத்ம ப்ரேமையை மதியாத விலங்கு உதைத்ததும் மெல்லிய உடல் நோவுற்றது, நோயுற்றது! 11-9-1921-இல் பாரதியார் படும் வறுமை நோயைச் சகிக்காது, இந்தத் தமிழருக்கு உணர்வு வரவேண்டுமென்று கவிமகள் விண்ணுலகிற்கு அழைத்துச் சென்றாள். "ஆம், வீர மகனே, மாந்தருக்குப் பாடினை; வா; உன் தமிழைத் தேவர் பருகட்டும்" என்றே கவித் தெய்வம் அவரை எடுத்து ஏகியது! இன்று பாரதி யாரின் "தேசோபநிஷத்து" சக்தி பரப்புகிறது! தமிழ்நாட்டில் பெரிய மஹாகவிகளும், வரகவிகளும் வருவார்களென்பது பாரதியாரின் உறுதி. ஆம், அது உறுதி. "முருகா, முருகா", "விண்ணும் மண்ணுந் தனியாளும்", "பாரத சமுதாயம்"-இம்மூன்றும் பாரதி பாடல்களின் ஜீவநாடிகள். இவை தமிழர் நரம்பில் சக்தி நாதம் புரிக!

---

# பாரதி பாட்டின் பலன்

## க. மஹான்

இவ்வுலகத்தில் சில மஹான்கள் வருகின்றனர்–காலசக்தியின் தூதர்; அசாதாரண சக்திகளை உள்ளே கொண்டு சாதாரணமாக உலவுகின்றனர். உடல்–மனிதரல்ல; அவர் உள்–மனிதர். புற விழிகளுக்கு உள்-மனிதன் புலப்படுவதில்லை. மாந்தர் பகைப்பர், நகைப்பர், வருத்துவர்; பிறகு......வருந்துவர், திருந்துவர், ஆடுவர், பாடுவர், கொண்டாடுவர்.

"Seven famous towns contend for Homer dead,
Through which the living Homer begged his bread"

என்று ஒரு பழமொழி. 'இலியாது' பாடிய ஹோமர் கிரேக்க மஹாகவி; கண்ணிழந்து, உடல் தளர்ந்து, பிச்சையுண்டு ஊர்தோறும் தள்ளாடித் தத்தளித்து ஏனென்று கேட்பாரின்றி இறந்தார். இறந்த பின் சிறந்தார். அவர் வாக்கு ஐரோப்பியக் கலைக்கே ஜீவ நாடியாக இருக்கிறது. அது மாதிரி பாரதியார் உள்ளமட்டும் வருந்தி, சென்றபின் நின்று நிலவுகிறுர்.

அவர் வாக்கு, புதிய தமிழ்நாட்டைத் தோற்றியுள்ளது. வீடு வாசலையும் கவனியாது, வறுமையும் பொறுமையும் தாங்கி ஆதன்ஸ் வீதிகளில் "தன்னறிவே பொன்னறிவு" என்று உபதேசித்தான் மஹாத்மா ஸோக்ராத்தன். காலம் பகைத்தது, நகைத்தது,

வெறுத்தது, ஒறுத்தது. அ-நீதி மன்றம் நஞ்சைக் கொடுத்தது. அதையும் புன்னகையோடு உண்டு, புன்னகையோடு உடல் பிரிந்து, உலகின் உள்ளத்தில் வாழ்கிறான் மஹாத்மா. ஸொக்ராத்தனுக்கு ரஸாயன விஷம் ஈந்தனர்; மஹான் பாரதியாருக்கு வறுமை நஞ்சு ஈந்தனர். அதை நினைக்கும்போது, நெஞ்சு பொறுக்கு தில்லையே!

கவிக்குயில் வறுமையெனும் கல்மாரி தாங்கியும், "கலைத்தேவியின் மீது விருப்பம் வளர்ந்தோரு பித்துப்பிடித் தது போல்" வாழ்ந்து, உடலை மண்ணுக்கு ஈந்தது; உயிரைத் தமிழர்க்கு ஈந்தது! அக்குயிலின் வாக்கு இளந்தமிழ் நாட்டை எழுப்பி, ஒரு வசந்தப் பூஞ்சோலையாக்கியது. அச்சோலையில் இன்று ஆயிரக்கணக் கான புட்கள் பாரதி பாடலைப் பாடிக் களிக்கின்றன. அந்தப் புதுத் தமிழ்ச் சோலையைச் சுற்றிப் பார்ப் போம்! பாரதி பாடலிற் செழித்த கற்பகங்களைக் காண்போம்!

## உ. முச்சுடர்த் தீ!

தமிழன்பு, நாட்டன்பு, கடவுளன்பு இம்முச்சுடர்க் கனலே பாரதி; அக்கனலைத் தாங்கிய ஸ்தூலகுண்டம் மண்; மண்ணானது. அதில் எரிந்த வேள்விக் கனல் தமிழர் மனந்தோறும் கொழுந்தேறுகிறது. "புதுவாழ் வுறவே, புவிமீதருள்வாய்" என்று கடவுளை வேண்டி, "வையமெல்லாம் நன்மை பெருகவைக்கும் விரதம்" பூண்டு வாழ்ந்தார் பாரதியார்.

## ௩. தேசாவேசம்

**1906**-ஐயும் நினையுங்கள்; 1937-ஐயும் பாருங்கள். 32-ஆண்டுகளாக நமது ஸ்வராஜ்யக் கற்பகம் வானோங்கி வளர்ந்து வருகிறது; புயல், இடி, தடியடி எல்லாவற்றையும் தனது உறுதிக்கு உரமாகக் கொண்டு வளர்ந்து வருகிறது. தண்ணீரல்ல, கண்ணீரல்ல, உயிர்நீர் ஊற்றி இக்கற்பகத்தை வளர்த்த வீரர் முன்னணியில் நம் கவி நிற்கிறார். திலகர், அரவிந்தர், லாலாஜி, ஐயர், பாரதி—இவர்களைப் பாரத மாதாவின் "பஞ்சப்யாரா"க்கள் என்று சொல்லத் தகும். மஹாசக்தியான பாரததேவிக்குத் தங்கள் வாழ்வை முதல் முதல் பலிதானமாக்கிய தீரர்கள் இவர்களே. வந்தே மாதரம் என்றால் வாய் பூட்டும் அக்காலத்தில், இந்தத் தீரர்கள் வள்ளிசாக முழு விடுதலையும் கறந்து வாங்க முயன்று பல கஷ்டங்களை அநுபவித்தனர்.

"அடிமைப் பேடிகள் தம்மை மனிதர்கள்
ஆக்கினாய்—புன்மை—போக்கினாய்!"
"எங்கு மிந்த ஸ்வராஜ்ய விருப்பத்தை
ஏவினாய்—விதை—தூவினாய்!"

—இந்த இரண்டு காரியங்களைப் பாரதியார் வாக்கு வல்லமையாற் செய்தார்.

"வந்தேமாதரம் என்றுயிர் போம்வரை வாழ்த்துவோம்."
"பாருக்குள்ளே நல்ல நாடு பாரதநாடு!"
"எங்கள்—பாரததேசமென்றே தோள் கொட்டுவோம்!"

என்று உறங்கிக் கிடந்த தமிழர் உரமுற்று எழுந்

தனர். பாரதநாட்டை மண்ணென்று எண்ணுது, சக்தித் தாய் என்று வணங்கச் செய்தார் அரவிந்தர். அதே போலத் தமிழர் மனக்கோயிலில் பாரத மாதா வின் திருவடியை வைத்து வணங்கச் செய்தார் பாரதியார்.

"ஆலயந் தோறும் அணிபெற விளங்கும்
தெய்வச் சிலையெலாம் தேவியிங் குனதே"
(தொமாரேயி ப்ரதிமா கதி மந்திரே மந்திரே)

என்று தேசபக்தர் உணரச்செய்தார். "தொன்று நிகழ்ந்த தனைத்து முணர்த்திடும்" என்று தொடங் கும் மணிவாக்கே பாரததேவியின் உண்மை வடிவம்.

"நல்லறம் நாடிய மன்னரை வாழ்த்தி
நலம்புரி வாளெங்கள் தாய்-அவர்
அல்லவ ராயின், அவரை விழுங்கிப்பின்
ஆனந்தக் கூத்திடுவாள்!"

பாரத சக்தியின் அனுக்ரஹ நிக்ரஹ சக்தியை இந்தப் பாட்டு நன்கு விளக்குகிறது.

இந்தியாவில் பாரததேவியின் மணிக்கொடி வணக்கம் பாடிய முதற் கவி பாரதியாரே.

"பட்டு துகிலென லாமோ—அதிற்
பாய்ந்து சுழற்றும் பெரும்புயற் காற்று
மட்டு மிகுந்தடித் தாலும்—அதை
மதியாதிவ் வுறுதிகொள் மாணிக்கப் படலம்"

என்ற மணிவாக்கிற்கு அக்ஷரலக்ஷம் தரலாம்! ஆம் எத்தனை அட்டகாசங்கள். அடக்கு முறைகள், இடி, புயல், தடியடி! எதற்கும் அசையாது நமது கொடி

கம்பீரமாக வானளாவிப் பறக்கிறது! நாகபுரிக் கொடிப்போர் இந்த மணிவாக்கை விளக்குகிறது.

"Freedom, yet thy banner torn, but flying,
Screams like thunder-storm against the wind!"

என்ற பைரனின் ஆவேசத்தைப் பாரதியாரிடம் காண்கிறோம்.

தாயின் மணிக்கொடியைச் சுற்றிக் கவி கண்ட "ஆரியக் காட்சி" வரவர, தொகையிலும் தொண்டிலும் பெருகிவருகிறது. அந்த ஆரியக் காட்சியில் தலைமைபெற்ற வீர மணிகளை எல்லாம் பாரதியார் போற்றிப் புகழ்ந்திருக்கிறார்.

லாலாஜி நாடு கடத்தப்பட்டபோது சென்னைக் கடற்கரைக் கூட்டத்தில் பாரதியார் பாடிக் கண்ணீர் விட்ட கண்ணிகள் நேவின்ஸன் என்னும் ஐரோப்பியன் உள்ளத்தையும் உருக்கின. இந்தியாவின் மறுமலர்ச்சியைப் பற்றிய தனது நூலில் நெவின்ஸன் பாரதியாரைக் குறிப்பிடுகிறான். வந்தே மாதரத்திற்கு அடுத்தது, "திலக்மஹராஜ்கீ ஜேய்!" அக்காலம் திலகர் பெயர் தேச பக்தருக்கு மந்திரம்.

"நாலு திசையும் ஸ்வாதந்தர்ய நாத மெழுகவே!
நரக மொத்த அடிமை வாழ்வு நைந்து கழிகவே!"

என்று நாடு மார்தட்டி எழுந்தது திலகர் பணியால். திலகரை வீராவேசத்துடன் போற்றிய கவி மஹாத்மா காந்தியை நினைக்கும்போது,

"வேதனைகள் இனி வேண்டா
விடுதலையோ திண்ணமே!"

என்று உறுதி கூறுகிறார். "புலிக்குள்ளே முதன்மை பெற்றான்; கொடிய நாகபாசத்தை மாற்ற மூலிகை கொணர்ந்தவன்; பாரததேசந் தன்னை வாழ்விக்கவந்த காந்தி மஹாத்மா!" என்று பொருந்தக் கூறுகிறார். பாரதியார் பாடலில் நமது விடுதலை வரலாறும் அதற்குப் பாடுபட்ட வீரர் பெருமையும் அடங்கியிருப்பதால் அது பாரத இதிஹாஸமும் ஆகும்.

## ச. வீர சுதந்திரம்

பாரதியார் வீர சுதந்திரம் வேண்டினார். "கட்டேன்பதனை வெட்டென்போம்; அண்டஞ் சிதறினாலும் அஞ்ச மாட்டோம்; வஞ்சக் கவலைக் கிடங்கொடேல்; யானேதற்கும் அஞ்சுகிலேன்; குன்றெனத் தலை நிமிர்; கொடுமையை எதிர்த்து நில்; ஜயமுண்டு; பயமில்லை; ஓம் சக்தி!" என்ற மின்வெட்டுகள் அவர் வாக்கிற் பளிச்சிடும்.

"ஓரஞ் செய்திடாமே—தருமந்
துறுதி கொன்றிடாமே,
சோரஞ் செய்திடாமே—பிறரைத்
துயரில் வீழ்த்திடாமே,
ஊரை யாளுமுறைமை"

யே அவர் வேண்டியது. "பாஞ்சாலி சபத"த்தில் இந்த அரச நீதியை நன்கு விளக்குகிறார்.

"நாட்டு மாந்த ரெல்லாம்—தம்போல்
நரர்க ளென்று கருதான்
ஆட்டு மந்தை யாமென்—றுலகை
அரச னெண்ணி விட்டான்!"

"தேயம் வைத்திழந்தான்—சீச்சீ
சிறிய செய்கை செய்தான்!"

இதில் நாட்டையும் மக்களையும் நன்மதிப்பது நீதி; அப்படியல்லது அநீதி என்று விளக்குகிறார்.

நாடு முழுதும் ஒரே ஜாதி, ஒரே குடும்பம்; சாதி மதநிறக் கொடுமைகள் கூடாது. அன்பு, அறிவு, ஒற்றுமை, பெண் பெருமை, ஆத்ம ஞானம், ஸர்வாத்ம ஸமத்வம்—இவையே சுதந்திர தத்துவம்.

"ஏழை என்றும் அடிமை என்றும்
எவனு மில்லை; ஜாதியில்
இழிவு கொண்ட மனித ரென்போர்
இந்தியாவில் இல்லையே!
வாழி கல்வி செல்வ மெய்தி
மன மகிழ்ந்து கூடியே
மனிதர் யாரு மொருநிகர்
ஸமான மாக வாழ்வமே!"

விடுதலை! விடுதலை! விடுதலை! இதுவே தேசோபநிஷத்தின் மஹாமந்த்ரம்!

## ரு. ஸமதர்மம்

தற்போது, பொதுவாக உலகின் மனத்தைக் கவர்ந்து வரும் ஸமதர்ம இயக்கம் பாரதியார் காலத்தில் தான் முளைகிளம்பியது.

"இம்மென்றால் சிறைவாசம்; ஏனென்றால் வனவாசம்" என்னும் ஜாரின் கொடுங்கோலெல்லாம் ஒரே "டபாரில்" புகையாகி, ஏழைத் தொழிலாளருக்கு விமோசனம் ஏற்பட்டுப் பொதுவுடைமைச்

செங்கொடி உயர்ந்தது ரஷ்யாவில். ஏழைத் தொழிலாளரின் வீராவேசப் புயலால் அதர்மக் காடு விழுந்தழிந்து, எரிந்து சாம்பி மண்ணானது. இச்சம்பவம் நம் கவியின் கருத்தை மிகவும் உயர்த்தியது.

"இடிபட்ட சுவர்போலே கலி விழுந்தான்
கிருதயுகம் எழுக மாதோ !",

என்று இச் சம்பவத்திற்கு முத்தாய்ப்பு வைக்கிறார் மஹாகவி. இந்த ஆவேசப் பாற்கடலைக் கடைந்தெழுந்த அமுத கலசம்போல பாரத ஸமுதாய வாழ்த்து எழுந்தது. அதுவே பாரதி மணிவாக்கின் சிந்தாமணி.

"முப்பது கோடி ஜனங்களின் சங்க
முழுமைக்கும் பொதுவுடைமை"
"மனிதர் உணவை மனிதர் பறிக்கும்
வழக்கம் இனியுண்டோ !"
"தனி யொருவனுக் குண வில்லையெனில்
ஜகத்தினை யழித் திடுவோம் !"
"எல்லாரும் ஓர்குலம் எல்லாரும் ஓரினம்
எல்லாரும் இந்நாட்டு மன்னர் !"

ஆ, இதில் எவ்வளவு தீர்க்கதரிசனம் அடங்கியுள்ளது! இதுதான் அவர் கடைசியாக ஒரு கடற்கரைக் கூட்டத்தில் கர்ஜித்த ஸமதர்ம கீதம் !

இக்காலத்தில் தொழிலாளர் இயக்கத்தையும் அபேத வாதத்தையும்பற்றிப் பாரதியார் அரிய கட்டுரைகள் எழுதியுள்ளார்; "ஸமூகம்" என்னும் கட்டுரைத் தொகுதியில் அவற்றைக் காண்க. ரஷியாவின் கொலை வழி நம் நாட்டிற்குப் பொருந்தாது. இது

தானதர்மங்களில் சிறந்த நாடு. தொழில் நிர்வாகச் சங்கம் ஏற்படுத்தி, ஒவ்வோர் ஊருக்கும் வேண்டிய தொழில்களைத் தகுமுறையாகப் பங்கிட்டுத் தொழிலாளருக்கு உண்ண உடுக்க இருக்க வசதிகளைச் செய்ய ஒரு கட்டுப்பாடு இருந்தால் வறுமை நீங்கும். தொழில் வளர்த்தல், விளைவைப் பகுந்துண்ணல்- இவையே நமது நாட்டிற்குத் தக்க வழி என்று அதில் குறிக்கிறார்.

எல்லாரும் தம் மட்டிற்கு உழைத்து உண்ண வேண்டும். அறிவும், தொழிலும், ஆத்ம ஞானமும் வளர வேண்டும். காணி நிலம்; வீடு; கிணறு; தென்னை மரங்கள்; குயிலிசை, தென்றல்-இந்த இயற்கை யின்பத்தில் காதல் மனைவியுடன், தனது தொழிலாகிய கவிமாலை புனைந்து வழிபட்டுப் பராசக்தியின் காவலில் வாழ வேண்டும் என்பது கவியின் விருப்பம்! உலகில் பிறரைத் திருடாது, கொல்லாது வாழ்ந்தால் வறுமை இருக்காது.

"சீரான மழை பெய்யும்; தெய்வ முண்டு.
சிவன்செத்தா லன்றி மண்மேற் செழுமையுண்டு"

என்கிறார்.

## சு. தொழில்

சுதந்திர நாட்டிற்கு இதந்தருந் தொழில்கள் கோடிக் கணக்காக வேண்டுமல்லவா? அதையும் காண்போம்.

"அரும்பும் வேர்வை உதிர்த்துப் புவிமேல்
ஆயிரந் தொழில் செய்திடு வீரே"

என்று தொழிலூக்கம் தருகிறார் கவி. தற்காலத்தில் புதிதாக வந்த பௌதிக அற்புதங்களை அக்காலத்திலேயே பாடியிருக்கிறார்.

"வெள்ளிப் பனி மலையின் மீதுலாவுவோம்
வேலைத் திரை முழுதுங் கப்பல் விடுவோம்!"
"காசி நகர்ப் புலவர் பேசுமுரைதான்
காஞ்சியிற் கேட்பதற் கோர் கருவி செய்வோம்."
"உலகத் தொழி லனைத்தும் உவந்து செய்வோம்."

ஆகாயக் கப்பலில் இமயமலையைத் தாண்டல், முற்காலம்போலே மீண்டும் பாரததேசம் கப்பல் வாணிபம் செய்து செல்வஞ் செழித்தல், இலங்கைக்குப் பாலம், சேதுவை மேடாக்கி வீதி சமைத்தல், கங்கையைப் பாய்ச்சி நடு இந்தியாவை வளமையாக்கல், பயிர்த்தொழில், சுரங்கத் தொழில், வாணிபம், நாட்டிற்கு நாடு பண்ட மாற்றல், உறவு செய்தல், தொழிலொற்றுமை, நதிகளில் உல்லாசப் படகு செலுத்தல், கலைகளை மதித்து வளர்த்தல், வீரம் போற்றல், பட்டு பஞ்சு ஆடைகளை மலை மலையாகச் செய்து குவித்தல், நாட்டைக் காக்கவும் வீட்டைக் காக்கவும் பலவகை ஆயுதங்களும் யந்திரங்களும் செய்தல், ஆலைத்தொழில், காகிதத்தொழில், ஆணி, குடை, உழுபடை ஊசி எல்லாச் சாமான்களும் நாட்டிற் செய்தல்; புதுப்புது யந்திர வண்டிகள் செய்தல், "ஞாலம் நடுங்கவரும் கப்பல்கள்" செய்தல், ரேடியோ அமைத்தல், முத்துக் குளித்தல், மண் பொன் மரம் இரும்புத்தொழில் ஒன்று பாக்கியில்லாது குண்டூசி முதல் ஆகாயகப்பல் மட்டும் நாட்டிற்

செய்யத் தொழிலூக்கம் அளிக்கிறார் கவி. பாட்டு, காவியம், ஓவியம், பரத நாட்டியம், மந்திரம், தந்திரம், பிரசங்கம், வானசாஸ்திரம் எல்லாம் வளர்க்க வேண்டும். தொழிலாளர்களை நன்மதிப்பின் உச்சிக்கு ஏற்றுகிறார் :

"விண்ணினின்றெம்மை வானவர் காப்பர்
மேவிப் பார்மிசை காப்பவர் நீரே."

கேவலம் வயிறு வளர்த்து, படைசேர்த்துப் பிறர் நாட்டுடன் போர் செய்யும் தொழிலல்ல ;

"நாட்டிலே அறம் கூட்டிவைப் பீரே"

என்பதனால் தர்ம நீதியாக வாழ்ந்து வளமை பெருகி, வறுமை, மடமை, அடிமை ஒழிந்து வையமெல்லாம் அமுதம் பெருகி, எல்லாரும் இன்புறவே கோடிக் கணக்கான தொழில்களைக் குறிக்கிறார்.

"பெரும் புகழ் நுமக்கே இசைக்கின்றேன் ;
பிரம தேவன் கலையிங்கு நீரே."

கேளுங்கள்! கேளுங்கள்! தொழிலாளர்களே, சிறப்புற்று வாழுங்கள்! நாட்டை வாழ்வியுங்கள்! பாரதியார் பல தொழிற் கரங்களுடன் அழகாகப் பாரத தேவியின் திருவுரு ஒன்று சித்திரித்து இந்தியா பத்திரிகையில் வெளியிட்டிருந்தார். முதல் முதலில் வெளியான நாட்டுப் பாடல்களிலும் அவை காணும்.

பாரதியாரின் தொழிலூக்கம் கீதாதர்மத்தை அடிப்படையாகக் கொண்டது. "மனத்தை இறைவனிடம் வைத்து ஒவ்வொரு கையும் வேலை செய்ய வேண்டும். விளைவைப் பகுத்து உண்ணவேண்டும்.

இதற்கு ஊர் தோறும் நமக்குள்ளேயே கட்டுப்பாடு வேண்டும்" என்று தொழிற் கட்டுரைகளில் வெகு அழகாக எடுத்துக் காட்டுகிறார்.

இந்தத் தீர்க்கதரிசனக் கவி அமைத்த "பொன்னொளிர் பாரத நாட்டின்" மின்னொளி நமது மனக் கண் முன்னே பளிச்சிடுகிறது. புறவிழிகளாற் காணும் காலமும் வெகு தொலை இல்லை. நாட்டிற்கு வேண்டிய தொழில்கள் பெரும்பாலும் நாட்டிலே நடந்துவருவதைச் சுதேசக் கண்காட்சியிற் காண்கின்றோம். இனி வீடுதோறும் காண்போமாக! அப்போது "உன்னத பாரத நாடெங்கள் நாடே" என்று தோள் கொட்டுவோம்!

## எ. தமிழ் வளர்ச்சி

பாரதியார் தமிழுக்குப் புத்தொளி அளித்துள்ளார். 1920-ம் ஆண்டிலிருந்து நம் இளந்தமிழர் எழுதும் நூல்கள், நடத்தும் பத்திரிகைகள் எல்லாம் பாரதித் தமிழ்தான்! பாரதியாரின் ஒவ்வொரு பொன்னுரைக்கும் ஒரு பத்திரிகை நடத்தலாம்; நூல் எழுதலாம். இதுகாறும் வள்ளுவரை மேற்கோள் உரைக்காதவர் இல்லை. இப்போதும் இனியும் பாரதி வாக்கை மேற்கோளாக உரைக்காதவர் இல்லை!

பாலுஞ் சோறும் வீட்டுக்குறுதி
பாரதி பாட்டு நாட்டுக்குறுதி

என்று சொல்வோம்!

தெளிந்த தமிழில் தெளிவுற மொழிதல்; அறிந்தோர்க்கு இனிமை; அழகின் அமுதம்; உயர்ந்த கருத்து, உலகிற்கு அரும்பயன்—இவை பாரதி மணி வாக்கின் இயல்பு. பண்டிதரின் " கரபுருக்கள் " அவருக்குப் பிடிக்கா. "றற்றுகரபுரா" என்று இருக்கும் பாடல்களை, 'இதென்ன சங்கடமடா!' என்று கிறுக்கிவிடுவார். சங்கத்தமிழ் வேறு; கம்பத் தமிழ் வேறு; பெரியபுராணத் தமிழ் வேறு; அவற்றை எல்லாம் தாண்டி, தாயுமானவரும் வள்ளலாரும் தெளிந்த தெய்வத் தமிழமுதம் அளித்தனர். பாரதியார் தாயுமானவர் நடையை மிகவும் போற்றுவார். நம்மாழ்வார் பாசுரங்களின் பக்திச்சுவையை அநுபவிப்பார். "வெறுமே வர்ணனைகளையும் கற்பனைகளையும் சமைத்து, யாருக்கும் எளிதில் புலப்படாதவலிய நடையில்" காவியம் எழுதுவது அவருக்கு இயல்பு இல்லை. சம்மதம் இல்லை. அந்தப் பழம் பண்டித சகாப்தம் முடிந்து போயிற்று. இக்காலத்தில் சிலர்போலச் சங்கத் தமிழை நாம் இகழக் கூடாது. அக்காலத்தில் அந்தத் தமிழ் எளிதாகப் புரிந்தது. இந்தக் காலத்திற்குப் பாரதி நடையே சரி. நைடதம், சிலப்பதிகாரம், கம்பன் இவற்றிற்கெல்லாம் பண்டிதர் துணையும், பல நாள் உழைப்பும் வேண்டும். நார் உரித்து, ஓட்டை உடைத்துப் பருப்பு உண்ண வேண்டும். பாரதி பாடல் அத்தனையும் முந்திரிப் பருப்புருண்டை; அப்படியே சாப்பிட்வேண்டியதுதான். பழஞ்சுவையிற் குறைவில்லை;

பல்லை உடைக்காது; புத்தமுதச் சுவை காணும்! பாரதியின் நடை ஷெல்லியின் நடை போன்றது; பைரனின் வீரமும், வேட்ஸ்வொர்த்தின் இயல்வளமும், மில்டனின் உன்னதியும் பாரதி வாக்கில் காணலாம். இத்துடன் காளிதாஸனின் சமத்காரமும் காணலாம். இதற்கெல்லாம் எடுத்துக் காட்டு குயில் பாட்டு, கண்ணன் பாட்டு, பாஞ்சாலிசபதம்-மூன்று இணையற்ற காவியமணிகள்! வற்றுச் சுரங்கமாகிய தமிழ், காலக்கனலில் உருகி உருகி, கரடு முரடுகள் நீக்கி, துரிசின்றி, மாற்றேறி இப்போது பாரதியாரால் சொக்குப் பொன்மணி மாலைகளாக்கி, தமிழ்ச் சமுதாய தேவிக்குச் சூட்டப்பட்டுள்ளது!

தேள், கனி மதுரமென்கோ!
தெளிந்தவர் உள்ளமென்கோ!
வான்சுவை யமுதமென்கோ!
வயங்குபொன் மணிகளென்கோ!
நான்முகன் புதிய வேதம்
நவின்றனன் உலகிற் கென்கோ!
கான்வளர் அருவி யென்கோ!
பாரதிக் கவிதை யம்மா!

அதைவிட எளிய நடை எழுத முடியாது; அதைவிட ஆழ்ந்த பொருளை அளக்க முடியாது. அதைவிட அழகை அநுபவிக்க முடியாது. பாட்டு, கவிதை, கட்டுரை, சிறுகதை, பெருங்கதை, வர்ணனை, மொழிபெயர்ப்பு அனைத்திற்கும் தாகூரைப் போலவே பாரதியார் சரியான வழிகாட்டியிருக்கிறார். கீதை மொழிபெயர்ப்பே பாரதியார் உரை நடையில்

மிகச் சிறந்தது. ஞானரதம் கற்பனையிற் சிறந்தது. "ஆறில் ஒரு பங்கு" சிறுகதையிற் சிறந்தது, குயில் பாட்டெல்லாம் கீட்ஸும் ஷெல்லியும்; நாட்டுப் பாட்டெல்லாம் பைரன்மயம்; ஞானப் பாட்டெல்லாம் அபினவ வேதகானம்! பக்திப் பாட்டெல்லாம் கபீர், நானக், ரவிதாஸ், வித்யாபதி, சண்டிதாஸ் இவர்களின் பந்தா! இவ்வாறு உலகக் கவிகளின் சுவை யெல்லாம் கொண்டுவந்து தமிழுக்கே புனர் ஜன்மம் அளித்திருக்கிறார் பாரதியார். கோடி வித மான பண்களமைத்து சுவை குலுங்கும் அமுதவாரிதி தமிழ்மொழி. அந்த அமுதவாரிதி பாரதி சகாப்தத்தில் அரிய முத்துக்களையும் ரத்தினங்களையும், அள்ளி வீசி சற்சரி பாணி கொட்டி ஆனந்தக் கூத்தாடுவதைக் காண்கிறோம். இன்னும் மேன்மேலும் முத்துமணி மாலைகள் விம்மக் காண்போம்!

"தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற—எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா"

என்று ஒவ்வொரு தாயும் தன் குழந்தைக்கு முலைப் பாலுடன் தமிழன்புப் பாலையும் ஊட்டும் காலம் வந்தது! உலகிலுள்ள அறிவுச் செல்வம், அருங்கலைச் செல்வம், தொழிற் செல்வம், வாணிபச் செல்வம், வீரச் செல்வம், இசைச் செல்வமெல்லாம் படைத்து, தமிழன்னை வெற்றிச் செல்வியாக விளங்கும் காலம் வருகிறது.

செந்தமிழ் நாடென்னும் போதினிலே—இன்பத்
தேன் வந்து பாயுது காதினிலே—எங்கள்

தந்தையர் நாடென்ற பேச்சினிலே—ஒரு
சக்தி பிறக்குது மூச்சினிலே

என்று ஒவ்வொரு தமிழனும் உணரும் காலம் வந்தது!

எட்டுத் திக்கும் சென்று எல்லாக் கலைச் செல் வங்களையும் தமிழில் கொண்டு குவிக்கும் முயற்சிக் கனல் எழுந்தது! தமிழ்ப் புகழ் ஏறுது! ஏறுது! இப்போது ஆங்கில மோகினிக்கு அடிமைப்பட்டுத் தாயை மறந்தவர்களும்,

"யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல்
இனிதாவ தெங்குங் காணோம்!
தெள்ளுற்ற தமிழமுதின் சுவைகண்டார்
இங்கமரர் சிறப்புக் கண்டார்"

என்று விழித்தெழுந்து தமிழ் மோகங்கொள்ளும் காலம் வருகிறது, வந்தது! தமிழ்நாட்டில் வரகவிகள் தோன்றியுள்ளனர்; இறவா நூல்கள் பிறக்கின்றன; எல்லாம் இந்தத் தீர்க்கதரிசியின் ஆவேசத்தால்!

வாழ்க கவிக்குயில் வாழ்கவே—நீடு
வாழ்க கவிப்ரம்மம் வாழ்கவே!

## அ. நாட்டுக் கல்வி

"வீடுதோறும் கலையின் விளக்கம்" வேண்டுகிறார் நம் கவி. மூளையில் பிறநாட்டுப் புத்தகமூட்டை சுமந்து, வேலையில்லாது, நெஞ்சுலர்ந்து கவலை பற்றி அலைகின்றனர் நம் வாலிபர்—கஷ்டகாலம்! "பேடிக் கல்வி பயின்றுழல் பித்தர்கள்" என்று இவர்கள் நெற் றியில் பட்டம் ஒட்டுகிறார் மஹாகவி. உய்வு என்ன? வழி காட்டுகிறார். ஆண் பெண் இருவரும் ஸரிஸமா

ணமாகக் கல்வி கற்று முன்னேறும் வழியை நன்கு விளக்குகிறார். "ஸமூகம்" என்னும் புத்தக மணியில் தேசீயக் கல்விப் பகுதியைத் திருப்பித் திருப்பிப் படியுங்கள்! நாங்கள் தமிழ்க் குருகுலத்தில் எந்தக் கல்வி முறையை அனுசரித்தோமோ அதை முன்பே பாரதியார் எழுதி வைத்திருக்கிறார். எல்லாம் அப்படி அப்படியே இருந்தது கண்டு திடுக்கிட்டேன். தேச பாஷை மூலமாகவே எண்ணெழுத்து, சரித்திரம், பௌதிகம், ஸயன்ஸ், பூகோளம், சமயம், ராஜ்ய சாஸ்திரம், பொருள் நூல்—எல்லாம் கற்பிக்க வேண்டும். கைத்தொழில், விவசாயம், தோட்டப் பயிற்சி, சரீரப் பயிற்சி, யாத்திரைப் பயிற்சி (Excursion) எல்லாம் முறையாகத் தந்து நாட்டினரை நல்ல தர்மவீரர்களாக்க வேண்டுமென்று பாரதியார் அவா. அதைப்பூர்த்தி பண்ணவே தமிழ்க் குருகுலம் எழுந்தது! தமிழ் நாட்டிற்கு அதிருஷ்டமில்லை. நல்ல காலம் வரவேண்டும்.

"தேசத்தின் வாழ்வுக்கும் மேன்மைக்கும் தேசீயக் கல்வி இன்றியமையாதது. தேசீயக் கல்வி கற்றுக் கொடுக்காத தேசத்தைத் தேசமென்று சொல்லுதல் தகாது. அது மனிதப் பிசாசுகள் கூடி வாழும் விஸ்தாரமான சுடுகாடேயாகும்" என்று பாரதியார் கண்டிப்பாகச் சொல்லுகிறார். அனிபெசண்டம்மையாரும் அருண்டேலும் கல்விக்காகப் பெரிய முயற்சிகள் செய்த காலத்தில் பாரதியார் நாட்டுக் கல்வியைப் பற்றிச் சில அரிய கட்டுரைகள் எழுதியுள்ளார்.

கிராமங்களில் கல்வி பரவ ஓர் அரிய திட்டத்தை உபதேசிக்கிருர். கட்டுரைத் தொகுதியில் காண்க.

இந்த மாதிரியே ஸங்கீதம், அபிநயம், கவிதை முதலியவற்றைக் குறித்துக் கலைப் பகுதியில் வெகு ரஸமாக எழுதுகிருர். எளிய நடை; ஆழ்ந்த பொருள்; அத்தனையும் கனிரசம், கனிரசம், கனிரசம்!

## கூ. பெண் விடுதலை

**பா**ரதியார் ஆண்களுக்கு ஆண்மை ஈந்தார்; பெண்களுக்கு விடுதலை விழிப்பீந்தார். பெண் விடுதலைக்கு வழி "மாதர்" பகுதியில் சாங்கோபாங்கமாக விளக்குகிருர். பெண்களுக்கு நல்ல கல்வி தர வேண்டும்; விவரந்தெரிந்து விவாகம்செய்யவேண்டும். இஷ்டமில்லாத கணவனை மணக்கும்படி வற்புறுத்தக் கூடாது. பிடிக்கா விட்டால் விவாக ரத்து செய்து கொள்ள உரிமையுண்டு; பிதுரார்ஜிதத்தில் பெண்களுக்கும் சமப்பங்கு உண்டு. கணவனை இழந்த இளம்பெண் மீண்டும் விவாகம் செய்து கொளளத் தடையில்லை. விவாகம் வேண்டாம் என்று தனித்திருந்து நல்ல முயற்சி செய்யும் பெண்களைத் தடுக்கக் கூடாது. பயத்தாலும் பொருமையாலும் வேறு ஆண்களுடன் பெண்கள் பேசக்கூடாது என்கின்றனர்; அந்தச் சந்தேகம் ஒழியவேண்டும். ஆண்களைப்போலவே பெண்களும் தலை நிமிர்ந்து உலாவ வேண்டும்; அவர்கள் எந்த உத்தியோகமும் செய்யத் தடையில்லை. ராஜாங்க உரிமைகளிலே பெண்களுக்

கும் சரிபங்கு அளிக்கவேண்டும். இத்தகைய உரிமைகளையெல்லாம் பாரதியார் பெண்ணினத்திற்குப் பட்டயம் செய்து வைத்திருக்கிறார்.

"மாதர் தம்மை இழிவு செய்யும்
மடமையைக் கொளுத்துவோம்!
வைய வாழ்வு தன்னி லெந்த
வகையிலும் நமக்குளே,
தாத ரென்ற நிலைமை மாறி
ஆண்களோடு பெண்களும்
சரிநிகர் சமானமாக
வாழ்வ மிந்த நாட்டிலே!
விடுதலை விடுதலை விடுதலை!"

"Female is Love and Beauty;
Male is Action and Power;
Great city is that
Which has great men and women"

என்று ஆத்மஞானியான வால்ட் விட்மன் சொல்லுகிறார்.

ஆணும் பெண்ணும் சேர்ந்தே மானிடம். பெண்ணினால் ஆண்மைக்கு வீரமும், வலிமையும், இன்பமும், வெற்றியும் உண்டாகும். ஆதிகாலத்தில் ஒரு பெண்ணை மணக்க, வீரர் தமது வீரமெல்லாம் காட்டினர். வேதரிஷிகள் தர்ம பத்தினியைச் சக்திக் கனலாகக் கருதினர். மத்திமகால ஐரோப்பாவில் பெண் வீரரின் வீரத்திற்கு ஆவேசமளித்தாள். தமிழர் நாகரிகம் எப்போதும் பெண்களை நன்மதித்து வந்தது.

"நூற்றி ரண்டு மலை களைச் சாடுவோம்
நுண்ணி டைப்பெண் ணொருத்தி பணியிலே!
காற்றி லேறியவ் விண்ணையுஞ் சாடுவோம்
காதற் பெண்கள் கடைக்கண் பணியிலே."

இந்த வாக்குகள் ஆண்மையின் ஆண்மையைக் கனல் பெறத் தூண்டுகின்றன! பெண்மை வாழ்கென நமது உற்சாகம் கூத்திடுகின்றது! பெண்கள் படும் துயரைக் கவி ஒரு நொடியும் தாங்கமாட்டார்:—பிஜித் தீவுக் கரும்புத் தோட்டத்தில் பெண்கள் படும் துயரைப் பாரதியார் உருகிப் பாடிய பாட்டு கல்லையும் கரைக்கும். ஒரு கண்ணற்ற தீவில், தனிக் காட்டில் பெண்கள் புழுங்கிக் கண்ணீர் விடுகின்றனர்:

"நாட்டை நினைப்பாரோ?—எந்த
நாளினிப் போயதைக் காண்ப தென்றே யன்னை
வீட்டை நினைப்பாரோ?—அவர்
விம்மி விம்மி விம்மி விம்மி அழுங்குரல்
கேட்டிருப் பாய் காற்றே—துன்பக்
கேணியி லே எங்கள் பெண்க ளழுதசொல்
மீட்டு முரையாயோ—அவர்
விம்மி யழவுந் திறங்கெட்டுப் போயினர்!"

ஆ! இரத்தக் கண்ணீர் பீறிடுகிறது!

இப்படி வருந்தும் பெண்களுக்குப் பாரதியாரின் புதுமைப் பெண் வீரவிடுதலை கொண்டுவருகிருள்.

"விலகி வீட்டிலோர் பொந்தில் வளர்வதை
வீரப் பெண்கள் விரைவி லொழிப்பராம்!"

என்று பாரதியார் கூறிய ஜோசியம் இரண்டாவது ஒத்துழையாமைப் போரில் உண்மையானது! எத்

தனை வீரமாதர் நாட்டுக்கொடியைத் தாங்கினர்! கண்ணைக் காக்கும் இமையிரண்டென்னவே ஆணும் பெண்ணும் காதலிற் கூடி மங்களமாக வாழவேண் மென்பது கவியின் உபதேசம்.

## ௧௦. காதல்

ஓரே வார்த்தையில்—காதல்; இதுவே பாரதி யார் வாழ்க்கையின் பாட்டு! காதல்—கடவுட்காதல், நாட்டுக்காதல், விடுதலைக்காதல், சக்திக்காதல், கண் ணன் காதல், முருகன் காதல், இளந்தமிழ்க் காதல், இயற்கைக் காதல், கவிப்பெண் காதல், யோகக் காதல், போகக் காதல், தன்னலம் கலவாப் பொது நலக் காதல்! பாரதி வாழ்வு காதற் கட்டிக் கரும்பு;

"காதலினால் மானிடர்க்குக் கலவியுண்டாம்,
கலவியிலே மானிடர்க்குக் கவலை தீரும்;
காதலினால் மானிடர்க்குக் கவிதையுண்டாம்;
கானமுண்டாஞ் சிற்பமுதற் கலைகளுண்டாம்;
ஆதலினாற் காதல்செய்வீர் உலகத்தீரே
அஃதன்றோ இவ்வுலகத் தலைமையின்பம்;
காதலினாற் சாகாம லிருத்தல் கூடும்;
கவலைபோம் அதனாலே மரணம் பொய்யாம்!"

இந்தக் காதல் சாமானியக் காம விகாரமல்ல. இது பெண்சக்தியும் ஆண்சிவமும் ஒரு மின்சாரத் தின் ஆகு மின்னல் ஏகுமின்னல் (Positive and negative currents) போலக் கூடி, வாழ்வைத் தெய்வ சேதனானந்த ஜோதியாக்கும் யோகமாகும். இந்தச் சிவசக்திக் காதல் யோகம் மஹார்ணவம், குலார்

ணவம், திருமந்திரம் போன்ற யோகநூல்களைக் கற்று அனுஷ்டித்த மஹான்களுக்கே தெளிவாகும். பெண்ணிடம் குண்டலிக் கனல் உள்ளது; அதைக் கொண்டு ஆதார சக்கரங்களை மலர்ப்பித்து ஸஹஸ்ராரசித்தி பெற்ற சுத்த போகயோகானந்தர்களுக்குப் பெண்மை வணங்கத்தக்க பராசக்தியாகும். ஆண்மை வணங்கத்தக்க சிவமாகும். இதைப் பாரதியார் பல இடங்களில் விளக்குகிறார். இவ்வாறு சக்தியளிக்கும் பெருமையே பெண்ணின் பெருமை.

"கடவுள் நிலை அவளாலே எய்த வேண்டும்"

என்று அரிய பெரிய யோக ரகசியத்தைக் குறிக்கிறார். பாரதியாரின் பெண்ணமுதம் அழகின் வடிவு; சக்தியின்பக் கற்பகம். இகம் பரம் இரண்டிற்கும் காதலையே வழியாகக் காட்டும் கவி இகக் காதலைக் குயிற் பாட்டிலும் பரமார்த்தக் காதலைக் கண்ணன் பாட்டிலும் வர்ணிக்கிறார்:

"காதலித்துக் கூடிக் களிப்புடனே வாழோமோ?
நாதக் கனவினிலே நம்முயிரைப் போக்கோமோ?
ஆசைக் கடலின் அமுதடா, அற்புதத்தின்
தேசமடா! பெண்மைதான் தெய்விகமாங் காட்சியடா!
....................கவிதைக் கனி பிழிந்த
சாற்றினிலே பண்கூத் தெனுமிவற்றின் சாரமெலாம்
ஏற்றியதனோடே யின்னமுதைத் தான்கலந்து,
காதல் வெயிலிலே காயவைத்த கட்டியினால்
மாதிவளின் மேனி வகுத்தான் பிரமனென்பேன்!"

உலகில் காதல் உள்ள மட்டும் இந்த அரிய சொல்லோவியம் சிலையெழுத்தாக நிலவும்! குயிற்

பாட்டில் உலகக் காதலின் பாதை கரடுமுரடென் பதை, கரடுமுரடில்லாத கட்டிக் கனிரஸத் தமிழில் விளக்குகிறார். காதல் காதல் காதல் என்று மோகப் படும் மனம் தான் விரும்பிய காதற் குயில் குரங் கையும் எருதையும் புல்லி நிற்கக் காண்கிறது. முடி வாகக் கவி புல்லும்போது அக்குயிலும் மறைந்து போகிறது. எல்லாம் பட்டப்பகலிற் கண்ட நெட் டைக் கனவாகிறது. "Love is a smoke raised with the fume of sighs" என்பது உண்மையாகிறது.

குயிற் பாட்டு காதற் பாட்டிற்கு அரசு; கவி தைக்கு அரசி. அந்தப் பாட்டினைப்போல் ஆச்சரியம் பாரின்மிசை இல்லையடா! அதன்,

"ஓசை தரு மின்பம் உவமை இல்லா இன்பமன்றோ?"

## கக. இயற்கைக் காதல்

இளமை முதலே பாரதியார் இயற்கைக் காதல் மிகுந்தவர்.

"நிலா வையும் வானத்து மீனையுங் காற்றையும்
நேர்பட வைத் தாங்கே,
குலாவு மமுதக் குழம்பைக் குடித்தொரு
கோலவெறி பிடித்தோம்!
உலாவு மனச்சிறு புள்ளினை யெங்கணும்
ஓட்டி மகிழ்ந்திடுவோம்
பலாவின் கனிச்சுளை வண்டியி லோர்வண்டு
பாடுவதும் வியப்போ?"

கவியின் உள்ளம் எவ்வாறு இயற்கை யின்பத்

தில் தாவுகிறது பாருங்கள்! வானிற் பறக்கிறது! காற்றிலேறிச் சவாரியும் செய்கிறது.

"தென்னையின் கீற்றுச் சலசல வென்றிடச்
செய்து வருங் காற்றே,
உன்னைக் குதிரைகொண் டேறித் திரியுமோர்
உள்ளம் படைத்து விட்டோம்!',

எல்லாம் ரவீந்திரமயம், ரவீந்திரமயம்! பாரதியார் சாமானியக் கவியல்ல! ஷெல்லி, பைரன், விட்மன் இவர் களுக்கெல்லாம் ஒரு படி மேலேறி, நம்மாழ் வாரின் விச்வாத்ம திருஷ்டியையும் அடைகிறார். என்ன அருமை!

In the whir and roar I fashion
The living image of God

என்ற கெத்தேயின் மனோபாவனையை அப்படியே பாரதியிடம் காண்கிறோம். பாரதி ஜெர்மனியில் பிறந்திருந்தால் கெத்தே; வங்கத்தில் பிறந்திருந்தால் தாகூர்; தமிழ் நாட்டில் பிறந்தார்! பாருங்கள் என்ன அழகு; என்ன அழகு! கண்ணனை எங்கும் காண்கிறார்!

சுட்டும் சுடர்விழி தான்—கண்ணம்மா
சூரிய சந்திரரோ?
வட்டக் கரியவிழி—கண்ணம்மா
வானக் கருமை கொல்லோ?
பட்டுக் கருநீலப்—புடவை
பதித்த நல்வயிரம்
நட்ட நடுநிசியில்—தெரியும்
நக்ஷத்திரங்களடீ!
சோலை மல ரொளியே—உனது
சுந்தரப் புன்னகைதான்?

நீலக் கடலலையே—உனது
நெஞ்சின் அலைகளடீ
கோலக் குயிலோசை—உனது
குர லினிமையடீ !
வாலைக் குமரியடி—கண்ணம்மா
மருவக் காதல்கொண்டேன் !''
யதாதித்யகதம் தேஜோ
ஜகத் பாஸயதே(அ)கிலம்
யச்சந்த்ரமஸி யச்சாக்நௌ
தத்தேஜோ வித்தி மாமகம்

"ஸூர்யனிடமிருந்து உலக முழுமைக்கும் சுடர் கொளுத்தும் ஒளியும், சந்திரனிடத்துள்ளதும், தீயி லுள்ளதும் - அவ்வொளி எல்லாம் எனதே'' என்னும் கண்ணன் மொழியைக் கவி எங்கும் கண்டு அநுபவிக் கிறார்! நம்மாழ்வாரும், சைதன்யரும் கண்ணனிடம் கொண்ட மதுரபாவனை பாரதியாரிடம் மற்றொரு காதற் சுவை பெறுகிறது. காயிலும் கனியிலும் கடவுளைக் காண்கிறார் கவி.

காயிலே புளிப்பதென்னே
கண்ண பெருமானே
கனியிலே இனிப்பதென்னே—
கண்ண பெருமானே.
"புஷ்யாமி சோஷதீ: ஸர்வா:
ஸோமோ பூத்வா ரஸாத்மக:''

"ரஸ வடிவமுள்ள ஸோமமாகிப் பூண்டுகளை வளர்க்கிறேன்'' என்னும் புருஷோத்தமன் வாக்கைப் புளியங்காயில் அநுபவிக்கிறார் நம் கவி. பாரதியாரின் நாட்டுப் பாட்டுத்தான் இப்பொழுது எங்கும் ஒலிக்

கிறது. உள்ளுருகி, உடல் குழைந்து உயிர் கலந்து பாடிய அவர் கவிதை நாவினின்றல்ல; கற்பனை மனத்தினின்றல்ல; ஆத்மவூற்றினின்றே பொங்கிப் பொசிகிறது!

நெரித்த திரைக்கடலில் நின்முகங் கண்டேன்!
நீல விசும்பினிடை நின்முகங் கண்டேன்!
திரித்த நுரையினிடை நின்முகங் கண்டேன்!
சின்னக் குமிழிகளில் நின்முகங் கண்டேன்!

ஜகந்நாதத்தில் அலையிற் கண்ணனைக் கண்டு கடலிற் குதித்த சைதன்யரின் பரவசமன்றோ இதைப் பாடுகிறது!

## ௧௨. சர்வாத்மக் காதல்

பாரதியாரின் மற்றுமோர் அற்புதமான குணம் தம்மைப்போலவே எல்லா உயிர்களையும் காணல்; எல்லாம் ஆத்மமயமாகக் காணல்.

"ஸர்வபூதஸ்திதம் யோ மாம்
பஜத்யேகத்வ மாஸ்தித:
ஸர்வதா வர்த்தமானோ(அ)பி
ஸ யோகி மயி வர்ததே"

"ஒருமை நிலை கொண்டவனாய், எல்லா உயிர்களிடத்திலுமுள்ள என்னைத் தொழுவோன் யாங்கணும் சென்ற போதிலும், அந்த யோகி என்னுளேயே இயலுகிறான்."

—பாரதியார் மொழிபெயர்ப்பு

இந்தக் கண்ணன் மொழியைக் காட்சியாகக் காண்கிறோம் நம் கவியின் உள்ளத்தில். நம் கவி கழுதைக் குட்டியிலும் கடவுளழகை அநுபவித்து முத்தமிடு

வார்! தாம் அந்தணர் என்ற அகந்தைப் பூணலையும் அறுத்தெறிவார்! சிந்தையை எப்போதும் தெய்வ சக்தியிடமே வைத்து எங்கும் அதுவாகக் காண்பார்! இரண்டு சிறு துரும்புகள் காற்றில் அசைவதை முருகன் - வள்ளியாகப் பாவித்து, கலியாணம் ஊடல் கூடல் எல்லாம் செய்கிறார். புட்களைக் கண்டால் பரவசம். பாருங்கள், அவர் சிட்டுக் குருவியை வர்ணிக்கும் அழகை! (கட்டுரைகள், பக்கம், 183)

"ஒரு பச்சைக் குழந்தை கைப்பிடியிலே பிடித்து விடலாம்...ஒன்று ஆண்; மற்றொன்று பெண். இரண்டும் தம்முள்ளே பேசிக்கொள்ளுகின்றன. கொஞ்சிக் குலாவி மிக இன்பத்துடன் வாழ்ந்து முட்டையிட்டுக் குஞ்சுகளைப் பசியில்லாமல் காப்பாற்றுகின்றன! சிட்டுக் குருவி பறந்து செல்வதைப் பார்த்து, எனக்கு அடிக்கடி பொறாமை உண்டாகும். ஆஹா! உடலை எவ்வளவு லாகவத்துடன் சுமந்து செல்லுகின்றது- தெய்வமே, எனக்கு இந்தச் சிறகுகள் கொடுக்க மாட்டாயா! - ஆஹா! எத்தனை தேசங்கள் பார்க்கலாம்!"

"பெட்டையி னோடின்பம் பேசிக் களிப்புற்றுப்
பீடையில் லாதொரு கூடு கட்டிக்கொண்டு
முட்டை தருங்குஞ்சைக் காத்து மகிழ்வெய் தி,
முந்த வுணவு கொடுத்தன்பு செய்திங்கு
விட்டு விடுதலை யாகிநிற் பாயிந்தச்
சிட்டுக் குருவியைப் போலே!"

குயிலிடம் கவிக்குக் குதூகலக் காதல்!

"மனித வுருநீங்கிக் குயிலுருவம் வாராதோ?
இனிதிக் குயிற்பேட்டை என்றும் பிரியாமல்,
காதலித்துக் கூடிக் களியுடனே வாழோமோ
நாதக் கனலினிலே நம்முயிரைப் போக்கோமோ?"

மற்றுமோர் அதிசய ரஸாநுபவம் பாருங்கள்! "மூஞ்சியைப் பாரு குரங்கு மாதிரி, வாலுதானில்லே!" என்று சாதாரண உலகம் பரிகாசம் செய்கிறது. அந்தக் குரங்கிற்கு வக்காலத்து வாங்கிக்கொண்டு அழகுபடுத்துகிறார் நம் கவி. பாரதியாரின் அபரிமித மான நகைச்சுவைக்கும் இது உதாரணம்.

கவிக்குயில் குரங்கைக் காதலித்துப் புகழுகிறது:

மேனி யழகினிலும் விண்டுரைக்கும் வார்த்தையிலும்
கூனி யிருக்குங் கொலுநேர்த்தி தன்னிலுமே,
வானரராஞ் சாதிக்கு மாந்தர்நிக ராவாரோ?
ஆன வரையும் அவர்முயன்று பார்த்தாலும்,
பட்டுமயிர் மூடப் படாத தமதுடலை
எட்டுடையால் மூடி எதிருமக்கு வந்தாலும்,
மீசையையும் தாடியையும் விந்தை செய்து வானரர்தம்
ஆசை முகத்தினைப்போல் ஆக்க முயன்றிடினும்,
ஆடிக் குதிக்கும் அழகிலுமை நேர்வதற்கே,
கூடிக் குதித்துக் குதித்தாலும், கோபுரத்தில்
ஏறத் தெரியாமல் ஏணிவைத்துச் சென்றாலும்,
வேறெத்தைச் செய்தாலும், வேகமுறப் பாய்வதிலே
வானரர்போ லாவாரோ? வாலுக்குப் போவதெங்கே!

புலியிலும் பராசக்தியைக் காண்கிறார்:

தின்ன வரும்புலி தன்னையு மன்பொடு
சிந்தனை செய்திடுவாய்—நன்னெஞ்சே

அன்னை பராசக்தி யவ்வுரு வாயினள்—
அவளைக் கும்பிடுவாய் நன்னெஞ்சே!
"பண்டிதாஸ் ஸமதர்சின:"

எல்லாவற்றையும் ஒன்றாகக் காண்போன் ஞானி. இந்த ஒருமைப் பார்வை பாரதியாரின் அடிப்படையான தத்துவம்.

காக்கைச் சிறகினிலே—நந்தலாலா—நின்றன்
கரியநிறந் தோன்றுதையே—நந்தலாலா!
பார்க்கு மரங்க ளெல்லாம்—நந்தலாலா—நின்றன்
பச்சைநிறந் தோன்றுதையே—நந்தலாலா!
கேட்கு மொலியிலெல்லாம்—நந்தலாலா—நின்றன்
கீத மிசைக்குதடா—நந்தலாலா!
தீக்குள் விரலை வைத்தால்—நந்தலாலா—நின்னைத்
தீண்டுமின்பந் தோன்றுதடா—நந்தலாலா!

என்ன கடவுட்காட்சி—கடவுளன்பு!

## ௧௩. சக்திக் காதல்

கதிரவன் கடவுள்; கதிர் சக்தி—உவமானம். அந்தச் சக்தி உலகெல்லாம் நிறைந்தது; அனைத்திற்கும் ஆதாரமானது. ஸரஸ்வதி, லக்ஷ்மி, காளி, மஹேச்வரி என்று சக்தி நாலு வகையாக விளங்கி அறிவு, அழகு, ஆற்றல், ஞானம் இந்த நான்கு வரங்களையும் தருகிறாள். நம் கவி பிள்ளைப் பிராயத்திலேயே ஸரஸ்வதியிடம் தமது வெள்ளை மனத்தைப் பறிகொடுத்தார். ஒளிவு மறைவில்லை; வெள்ளையாகவே காதலிக்கிறார். அது ஒரு பெரிய கதை.

பிள்ளைக் கவி ஆடி வருகிறான்; வீதி முனையில் ஏடு பிடித்து வருகிறாள் கலைமகள்; சந்தித்ததும்,

"ஞானங்கள் சொல்லி இனிமை செய்வாள்; இன்று
கூடி மகிழ்வ மென்றால்—விழிக்
கோணத்திலே நகை காட்டிச் செல்வாளம்மா."

இவ்வாறு 11-வயசு மட்டும் வெண்மகள் காதல். பிறகு குடும்பக் கவலை வருகிறது; லக்ஷ்மியைக் காதலிக்கிறார். வருகிறாள் சுந்தரி. அவள் அழகிற்குச் சித்தத்தைத் திறை கொடுக்கிறார்! அங்கும், "நெஞ்சம் ஆரத் தழுவிட வேண்டுகின்றேனம்மா" தான்! "மலரின் மேவு திருவே, உன்மேல் மையல் பொங்கி நின்றேன், உன் இன்பம் வேண்டுகின்றேன்!"

லக்ஷ்மி தேவி மட்டும் கவியை ஏமாற்றிவிட்டாள்' பிறகு மகாகாளி வருகிறாள்.

"அன்னை வடிவமடா—இவள்
ஆதி பராசக்தி தேவியடா—இவள்
இன்னருள் வேண்டுமடா—பின்னர்
யாவும் உலகில் வசப்பட்டுப் போமடா!"

என்று கொண்டாடித் தோத்திரம் பாடித் தொழுகிறார். பரமஹம்ஸர் மந்திரம் 'ஓம் காளி, மா!' பாரதியார் மந்திரம் 'ஓம் சக்தி!' காளிப்பாட்டில் தான் பாரதியாரின் சக்திக் காதல் கனலேறுகிறது.

"இன்பமாகி விட்டாய்—காளி
என்னுளே புகுந்தாய்!
பின்பு நின்னை யல்லால்—காளி
பிறிது நானுமுண்டோ!"

சக்திக் காதலின் உச்சநிலை இது! பரமஹம்ஸரை ஆவேசப்படுத்திய ராமப்ரசாதின் சக்திப் பாடல்களைப்

போல பாரதியாரின் சக்திப் பாடல் நம்மைப் பரவசப் படுத்துகிறது!

"தஞ்சமென் றேயுரைப் பீர்அவள் பேர் சக்தி
ஓம் சக்தி ஓம் சக்தி ஓம்!"

## ௧௪. கண்ணன் காதல்

பாரதியார் மிக உயர்ந்த வேதாந்தி; ஸ்ரீராம தீர்த்த பரமஹம்ஸரைப்போலவே,

"சாமி நீ சாமி நீ கடவுள் நீயே
தத்வமஸி; தத்வமஸி நீயே யஃதாம்!"

என்று அறிந்துணர்ந்த அநுபவச்சுடரினின்றுதெறித்த அன்புப் பொறிகளே பாரதியாரின் வேதாந்தப் பாட்டுக்கள். நம்மாழ்வார், ஆண்டாள், ஸூர்தாஸ், ரவிதாஸ், ராமப்ரஸாத், சண்டிதாஸ் முதலிய பக்தர்கள் போன்று நம் கவியும் கடவுளைப் பல பாவனைகளில் அன்பு செய்கிறார். எனினும் அவர்களிடம் காணாத சுதந்தரத்துடன் கடவுளுறவு பேணுகிறார்.

"தோத்திரங்களில்லை—உளந்
தொட்டு நின்றாற் போதுமடா"

என்றபடி கடவுளைத் தம் ஆன்மக்காதலி போலும் ஆருயிர் நண்பன் போலும் உரிமைகொண்டு கட்டிப் பிடித்துத் தொட்டு நிற்கிறார். குயிற் பாட்டில் இசைத்த கரடு முரடான காதல், கண்ணன் பாட்டில் கரடு முரடற்ற கடவுளின்பக் காதலாக வளருகிறது. கண்ணன் பாட்டுத்தான் பாரதியார் பாடல்களில் சிரோன்மணி; மாயையின் தளைகளை உதறி எறிந்து,

கவலைகளை வெட்டி எறிந்து கண்ணனிடம் மனம் பதிந்து திரிந்த பரமபக்தரே பாரதியார்.

"நீ தரும் இன்பத்தை நேரென்று கொள்வேனோ—
மாயையே! சிங்கம்
நாய்தரக் கொள்ளுமோ நல்லர சாட்சியை மாயையே!"

என்று மாயையைத் துரத்தியடிக்கிறார். இந்த உவமையைக் கம்பனின் அங்கதன் இராவணன் முன் வழங்குகிறான்:

"நீ தரக் கொள்வன் யானே!
இதற்கினி நிகர்வே றெண்ணின்
நாய்தரக் கொள்ளுஞ் சீயம்
நல்லர சென்று நக்கான்."

கண்ணன்—காளி—எல்லாம் தெய்வ சக்தியே. எவ்வாறு குருக்ஷேத்திரத்தில் அர்ஜுனன் "மாம் த்வாம் ப்ரபன்னம்" என்று கண்ணனைச் சரண் புகுந்தானோ அவ்வாறே வறுமையும் கவலையும் கட்டும் காவலுமாகிய துரியோதனக் கும்பல்கள் சூழும் இந்த ஜீவக்ஷேத்திரத்தில் யாக்கைத் தேரை ஓட்டும் அந்த ராத்மாவான கண்ணனையே பாரதியார் சரண் புகுந்தார்! 1909-க்குப் பிறகு பாரதியாரைப் பரம ஞானி பக்தராகவே கொண்டாடத் தகும்.

ஆண்டானடிமைத் திறத்தை பாரதியார் மன முருகிப் பாடுகிறார். பாரதியாண்டையின் பாரளாவிய கடவுளன்பைப் பாருங்கள்!

"தஞ்ச முலகினில் எங்கணு மின்றித்
தவித்துத் தடுமாறிப்

பஞ்சைப் பறையனடிமை புகுந்தனன்
பார முனக்காண்டே!

என்று சரண்புகுந்து, தம் குறைகளை யெல்லாம் முறையிடுகிறார்.

"பெண்டு குழந்தைகள் கஞ்சி குடித்துப்
பிழைத்திட வேண்டுமையே!"

அது மட்டுமா?

"அண்டை அயலுக்கென் னுலுபகாரங்கள்
ஆகிட வேண்டுமையே—உபகாரங்கள்
ஆகிடவேண்டுமையே!
மானத்தைக் காக்கவோர் நாலு முழத்துணி
வாங்கித் தர வேண்டும்."

தமக்கு மட்டுமா? இல்லை. தமக்கு நாலு முழம் போதும். ஆனால்,

தானத்துக்குச் சில வேட்டிகள் வாங்கித்
தரவுங் கடனுண்டே—சிலவேட்டி
தரவுங் கடனுண்டே!

பாரதியார் உடல் பிரிந்ததைக் கேட்ட அன்று இந்த ஆண்டைப் பாட்டைப் படித்து நாள் முழுதும் விம்மி விம்மி அழுதேன்! இன்னும் கண்ணீரில் தோய்த்தே இதை எழுதுகிறேன்! என்ன தாராள மான உள்ளம்! என்ன ஸர்வாத்ம ப்ரேமை! தன்னல மென்பது சிறிதும் உண்டா! உலகமெல்லாம் தமது குடும்பம் என்று காதலித்த அந்த அன்பை என் னென்று உரைப்பது?

ஒன்பது வாயிற் குடிலினைச் சுற்றி
ஒருசில பேய்கள் வந்தே,

துன்பப் படுத்துது மந்திரஞ் செய்து
தொலைத்திடவேண்டுமையே !
"சேரி முழுதும் பறையடித் தேயருட்
சீர்த்திகள் பாடிடுவேன் !"

பாடத் தொடங்குகிறார். சேவகன் வருகிறான்.

"ஏனடா நீ நேற்றை யிங்குவர வில்லையென்றால்
பானையிலே தேளிருந்து பல்லாற் கடித்ததென்பார்"

என்று சாக்குப் போக்கின்றி,

"காதல் பெரிதெனக்குக் காசு பெரிதில்லை"

என்று வருகிறான் கண்ணன்—சேவகன்! அதன் பின் அரசன்—கண்ணன் வருகிறான். வாக்கு அத்தனையும் தீர்க்கதரிசனம்; பின்னால் அப்படியே நிறைவேறும்; பார்க்கப் போகிறோம், பார்க்கப் போகிறோம்.

"வான நீர்க்கு வருந்தும் பயிரென
மாந்தர் மற்றிவன் போர்க்குத் தவிக்கவும்,
தான கீர்த்தனை தாளங்கள் கூத்துகள்
தனிமை வேய்ங்குழ லென்றிவை போற்றுவான் !
நாமவன் வலி நம்பி யிருக்கவும்,
நாண மின்றிப் பதுங்கி வளருவான்.
தீமை தன்னை விலக்கவுஞ் செய்குவான் ;
சிறுமை கொண்டொளித் தோடவுஞ் செய்குவான் ;
தந்தி ரங்கள் பயிலவுஞ் செய்குவான் ;
சவுரி யங்கள் பழகவுஞ் செய்குவான் ;
மந்தி ரத்திற னும்பல காட்டுவான் ;
வலிமை யின்றிச் சிறுமையில் வாழ்குவான்.
காலம் வந்துகை கூடுமப் போதினில்,
கணத்திலே புதி தாக விளங்குவான் !
ஆல கால விடத்தினைப் போலவே
அகில முற்று மசைந்திடச் சீறுவான் !

வேரும் வேரடி மண்ணுமில் லாமலே
வெந்து போகப் பகைமை பொசுக்குவான்.
பாரும் வானமும் ஆயி ர மாண்டுகள்
பட்ட துன்பங் கணத்திடை மாற்றுவான்.
சக்க ரத்தை எடுப்ப தொருகணம்!
தருமம் பாரில் தழைத்தல் மறுகணம்
இக்க ணத்தில் இடைக்கண மொன்றுண்டோ?
இதற்குள்ளே பகை மாய்த்திட வல்லன் காண்!"

நம்புங்கள்! நம்புங்கள்! கண்ணன் அவதரித்துள்ளான்! விடுதலை தருவான்!

சீடக் கண்ணன் வேடிக்கை காட்டுகிறான். குருக் கண்ணன் உள்ளே கடவுளை வைத்து உலகில் வாழும் கர்ம யோகோபதேசம் செய்கிறான். நேசக் கண்ணன் சுடர்ப் பூச்சிகள் போன்று நம் தீமைகளை நசுக்கு கிறான்.

"உள்ளத்தி லேகரு வங்கொண்டே போதினில்
ஓங்கி யடித்திடுவான்;
கள்ளத்தைக் கொண்டொரு வார்த்தை சொன்னாலங்கு
காறி உமிழ்ந்திடுவான்!
உண்மை தவறி நடப்பவர் தம்மை
உதைத்து நசுக்கிடுவான்—அருள்
வண்மையி னாலவன் மாத்திரம் பொய்கள்
மலைமலை யாயுரைப்பான்."

தாய்க் கண்ணன் இயற்கையுலகிலுள்ள பொருட் குவையெல்லாம் தந்து முலைப்பாலூட்டி மடியில் வைத்து நமது கவிக் குழந்தையை வளர்க்கிறாள் தந்தைக் கண்ணன் வேண்டியது தந்து அர்ஜுனன்

போலாக்குகிருன். தந்தைக் கண்ணன் பகுதி முழுவதும் மற்ருேர் உண்மை சித்திரம்.

"என்புடை பட்ட பொழுதும்—நெஞ்சில்
ஏக்கமறப் பொறுப்பவர் தம்மையுகப்பான்
இன்பத்தை எண்ணுபவர்க்கே—என்றும்
இன்பமிகத் தருவதி லின்ப முறுவான்."

தவழ்ந்து வருகிருன் குழந்தைக் கண்ணன்!

"பிள்ளைக் கனியமுதே—கண்ணம்மா!
பேசும் பொற் சித்திரமே!
அள்ளி யணைந்திடவே—என் முன்னே
ஆடி வருந்தேனே!
கன்னத்தில் முத்த மிட்டால்—உள்ளந்தான்
கள்வெறி கொள்ளுதடீ!
உன்னைத் தழுவிடிலோ—கண்ணம்மா
உன்மத்த மாகுதடீ!
உன்கண்ணில் நீர்வழிந்தால்—என்னெஞ்சில்
உதிரங் கொட்டுதடீ!
என்கண்ணிற் பாவையன்ருே—கண்ணம்மா
என்னுயிர் நின்னதன்ருே!

என்ன வாத்ஸல்யம்! என்ன வாத்ஸல்யம்! நமது ஜீவாத்மாவும் இப்பாட்டுவெறி கொண்டு பரமாத்மக் கண்ணனைத் தழுவுகிறது! அதன் பின் "தீராத விளையாட்டுப் பிள்ளை—கண்ணன்" வந்து லீலானந்தம் அளிக்கிருன்.

"தின்னப் பழங் கொண்டு தருவான்—பாதி
தின்கின்ற போதினிலே தட்டிப்பறிப்பான்
பின்னலைப் பின்னின் றிழுப்பான்—தலை
பின்னே திரும்புமுன் னேசென்று மறைவான்

அங்காந் திருக்கும்வாய் தனிலே—கண்ணன்
ஆறேழு கட்டெறும் பைப்போட்டு விடுவான் !

என்ன ரஞ்சிதமான வர்ணனை ! இந்த வேடிக்கை எல்லாம் நம் கவிக்கு வெகு பிரியம்! முடிவில் அபர பக்தியின் சிகரமான மதுரபாவனை வருகிறது! கவி கற்பனையும் இன்பச் சிகரத்திற்கு ஏறுகிறது !

இந்தப் பாவனையில் ஆணுருக்கொண்ட ஆண்டாளாக விளங்குகிறார் நம் கவி. ஆண்டாள் காதலால் கூவிக் கூவி இறுதியில் ஒரேயடியாகக் காதற்கண்ணனுள் ஐக்கியமாகி மறைந்து போகிறாள். நம் கவியாண்டாள் கண்ணனுடன் கூடி ஆயிரம் வகையான ரஸாநுபவங்களைப் பெறுகிறாள்.

கண்ணக் காதலனை அணைய நம் கவிக் காதலி ஒரு தமிழ் மறக்குல மாதாக மாறுகிறாள் :

" சோர மிழைத்திடையர் பெண்களுடனே—அவன்
சூழ்ச்சித் திறமைபல காட்டுவதெல்லாம்
வீர மறக்குலத்து மாத ரிடத்தே
வேண்டிய தில்லையென்று சொல்லிவிடடீ !
நேர முழுதுமந்தப் பாவிதனையே—உள்ளம்
நினைந்து மறுகுதடீ தங்கமேதங்கம் !

சரி; தோழியைத் தூது விடுகிறாள்; கண்ணன் வருகிறான். சும்மாவா? கனிகள், சந்தனம், அத்தர், பூ, தைலம், மை—எல்லாம் கொண்டுவருகிறான்; பொட்டிடுகிறான் ; மார்பெழுதுகிறான் ; பணமும் தந்து மையல் செய்கிறான்.

"மங்கள மாகுதடீ—பின்னோர்
வருத்த மில்லையடீ!

நாயகனுடன் குலாவியாயிற்று.

பிறகு காதலனும் காதலியுமாக மாறி மாறி ஆண் பெண் இரண்டின்பமும் அநுபவிக்கிறார். இது ஒரு புத்தப் புதுமையான மதுரபாவனை. சைதன்யர் பரம ஹம்ஸாதிகள் தம்மை ராதையாகவே பாவித்து நாயகியாகவே காதல் செய்தனர். பாரதியார் கண்ணனைத் தம் சொந்தக் காதலியாகவே எண்ணி,

"ஏடீ சாத்திரங்கள் வேண்டேன்—நின
தின்பம் வேண்டுமடி கனியே—நின்றன்
மோடி கிறுக்குதடி தலையை—நல்ல
மொந்தைப் பழைய கள்ளைப் போலே!"

என்று துடுக்காகக் கேட்கிறார்.

"காத்திருப் பேனோடீ—இதோ பார்
கன்னத்து முத்த மொன்று!"

என்று தமது காதல் முத்திரையைக் கண்ணன் கன்னத்தில் பதியவைத்துவிடுகிறார்! காதலி நாணி முகத்தை மூடுகிறாள்.

தில்லித் துருக்கர்செய்த பழக்கமடீ—பெண்கள்
திரையிட்டு முகமலர் மறைத்துவைத்தல்;
சொல்லித் தெரிவதல்லை மன்மதக்கலை—முகச்
சோதி மறைத்துமொரு காதலிங்குண்டோ!

என்று முகமூடியைத் திறக்கிறார். இதில் ஆழ்ந்த அத்யாத்மப் பொருள் உள்ளது. ஜீவாத்மாவினின்று பரமாத்மாவைப் பிரித்து நிற்கும் மாயையான முகமூடியை விலக்குதலையே இது குறிக்கும். வெகு உரி

மையுடன் கண்ணக் காதலியின் ஊடலைத் தீர்த்துக் கூடுகிறார், பாருங்கள்.

"கன்னி வயதிலுன்னைக் கண்ட தில்லையோ—கன்னங்
கன்றிச் சிவக்க முத்த மிட்ட தில்லையோ?
பன்னிப் பலவுரைகள் சொல்லுவதென்னே—துகில்
பறித்தவன் கைபறிக்கப் பயங்கொள்வானே?"
"பாட்டுஞ் சுதியுமொன்று கலந்திடுங்கால்—தம்முட்
பன்னியுபசரணை பேசுவதுண்டோ?"

இவ்வாறு நாயக நாயகி பாவத்தின் மர்ம ஸ்தானத்தைத் தொட்டுக் கண்ணனைக் கூடிப்புல்லுகிறார். அந்த ஜீவாத்ம பரமாத்ம ஐக்கியத்தை வர்ணிக்கும் பாட்டுத்தான் என்ன இன்பம்! மற்றதையெல்லாம் காலம் அழித்தாலும், இது ஒன்றே நம் கவியின் பெருமையைச் சொல்லும்!

வீணையடி நீயெனக்கு; மேவும் விரல் நானுனக்கு
மாணுடைய பேரரசே, வாழ்வுநிலையே—கண்ணம்மா!
வானமழை நீயெனக்கு; வண்ணமயில் நானுனக்கு
ஊனமறு நல்லழகே, ஊறுசுவையே—கண்ணம்மா!
வெண்ணிலவு நீயெனக்கு; மேவுகடல் நானுனக்கு!
பண்ணுசுதி நீயெனக்கு; பாட்டினிமை நானுனக்கு!
காதலடி நீயெனக்கு; காந்தமடி நானுனக்கு
நாதவடிவானவளே, நல்லவுயிரே—கண்ணம்மா!

## ௧௫. ஆன்மக் காதல்

இவ்வாறு எல்லா இன்பங்களையும் கண்ணனிடம் அநுபவித்து உயிரிற் கலந்து பக்தியோகத்தின் உச்சநிலையை எட்டிய நம் கடவுட் கவி இனி வேதாந்த விண்ணில் தாவுகிறார். அபரபக்தியின்

உச்சியில் பரபக்தி தோன்றுகிறது; ஆன்மக் காதல் மலர்ந்து கனிகிறது. நிற்பது, நடப்பது, பறப்பதெல்லாம் தன்மயமாகக் காண்கிறார். பௌத்தம், சமணம், பார்ஸி, ஹிந்து, இஸ்லாம், கிறிஸ்தவம், தாவுமதம், கண்பூசி மதம் எல்லா மதங்களும் ஒன்றெனக் காண்கிறார். பாரதி அறுபத்தாறு முழுதும் வேதாந்தலஹரி.

பூமியிலே வழங்கிவரு மதத்துக் கெல்லாம்
பொருளினை யிங்கெடுத்துப் புகலக் கேளாய்:-
சாமி நீ சாமி நீ: கடவுள் நீயே,
தத்வமஸி; தத்வமஸி நீயே யஃதாம்.
பூமியிலே நீ கடவு ளில்லை யென்று
புகல்வது நின் மனத்துள்ளே புகுந்த மாயை
சாமி நீ; அம்மாயைதன்னை நீக்கி
ஸதாகாலம் "சிவோஹ" மென்று சாதிப்பாயே.

இந்த உச்சநிலையை எட்டியபின் முடிவாக உலகிற்கு உபதேசிக்கிறார், ஆத்ம ஞானத்தை:

என்ன வரங்கள், பெருமைகள், வெற்றிகள்
எத்தனை மேன்மைகளோ,
தன்னை வென்றாலவை யாவும் பெறுவது
சாத்தியமாகுமென்றே,
முன்னை முனிவர் உரைத்த மறைப் பொருள்
முற்று முணர்ந்த பின்னும்
தன்னை வென்றாளும் திறமை பெறாதிங்கு
தாழ்வுற்று நிற்போமோ!

இவ்வாறு தம்மை வென்று ஆத்மஜயம் அடைந்த பின்,

"இங்கே தேவர் சங்கம் கூடும்
மங்கும் தீமை—பொங்கும் நலமே"

இவ்வாறு தெய்வசித்தியினால் மாந்தரை அமரராக்கி உலகில் தெய்வ சங்கம் ஸ்தாபிக்கும் உன்னதமான அத்யாத்ம லக்ஷ்யத்தைக் காட்டுகிறார் அமர கவி.

## கசா. தமிழர் கடமை

"பாட்டுத் திறனாலே - இவ்வையத்தைப்
பாலித் திடவேண்டும்."

ஆம், தமது பாட்டுத் திறத்தால் நம் வரகவி செய்த அற்புதங்களைப் பாருங்கள்! இவ்வாறு நாடு, வீடு, ஆண், பெண், குழந்தை, கல்வி, கேள்வி, அறிவு, தொழில், ஒற்றுமை, விடுதலை, அன்பு, சக்தி, தெய்வ பக்தி, ப்ரம்மஞானம் முதலிய எல்லாவற்றிற்கும் தெளிவாக, இனிதாக, ஆவேசக் காதலுடன் வழி காட்டிச் சென்ற இக் கவிக் குயிலை என்னென்று அழைப்பது? செத்துக் கிடந்த தமிழருக்குப் புத்துயிரளித்த இந்த வாக்சஞ்சீவியை என்னென்று அழைப்பது? தமிழ் நாட்டில் வீரக்கனலெழுப்பிய இந்த வெற்றி வீரக் கவியை என்னென்று அழைப்பது! நமது நரம்பில் சக்தி ஏற்றிய இந்தச் சக்திப் பித்தனை என்னென்று அழைப்பது? பழம் பொய்களை வெட்டி வீழ்த்திப் புதிய தமிழ் நாட்டை ஆக்கிய இந்த கவி ப்ரம்மத்தை என்னென்று அழைப்பது? காவியம், கலை, கல்வி, நாட்டன்பு அனைத்திலும் புத்தொளி பாய்ச்சிய இந்தக் கவிக் கதிரவனை என்னென்று அழைப்பது? கலியுகம் அழிந்து கிருதயுகம் பூக்கத்

தமது வாக்கினுல் தவம் செய்த இந்தக்கவியோகியை என்னென்று அழைப்பது?

> வீரக் கனலொளியே; வெற்றித் திருமொழியே,
> பாரிற் கமுதருளும் பாலூற்றே—ஆரமாய்க்
> கன்னித் தமிழணிந்த கற்பகப்பூ மாலை; கவி
> மன்னன் புலவர் மணி!

தமிழனுகப் பிறந்த ஒவ்வொருவனும் பாரதியின் பாடலைப் பாடி வழிபடுக; உலகெங்கும், பல மொழிகளிலும் பரப்புங்கள்! எங்கள் பாரதியார் பிறந்த தமிழ் நாடு என்று செருக்குறுங்கள்! என் அருமைத் தமிழர்களே, நமது பாசமே பற்றி நமது நலமே வேண்டி, சக்தியை வழுத்திப் பித்தமான நம் வர கவிஞருக்கு என்ன கைம்மாறு செய்யப்போகிறீர்கள்?

நமது தமிழ் நாட்டில் அடக்கமும், காரியத் திறனும் நிறைந்த ஓர் அரிய நண்பர் உள்ளார் – ஹரிஹர சர்மா. தமிழரிடையே ராஷ்ட்ர பாஷையான ஹிந்தியைப் பரப்பிய பெருமை பெற்றவர்; பாரதியார் நூல்களை வெளியிட்டுத் தமிழரிடையே பரப்பிய பெருமையும் அவரைச் சேர்ந்தது. அவருக்குப் பல வகையிலும் துணை புரிந்து, பாரதி நூல்களைத் தேடிப் பிடித்து அச்சேற்றச் செய்பவர் பாரதியாருடன் பிறக்கும் பாக்கியம் பெற்ற ஸ்ரீமான் ஸி. விசுவநாதன் அவர்கள். இவர்களுடன் கூடி இன்னும் பல அன்பர்கள் சேர்ந்து பாரதி நூல்களை வெற்றிபெற வெளியிட்டுள்ளனர்.

தமிழனுகப் பிறந்த ஒவ்வொருவனும் பாரதியார் பிரபந்தங்களை வாங்கிப் படிக்கவேண்டும். சீக்கியர்

கிரந்த சாஹெபை மதிப்பது போலவும், கிறிஸ்தவ சகோதரர் பைபிளை மதிப்பது போலவும், வங்காளிகள் தாகூர் நூல்களை மதிப்பது போலவும், ஆங்கிலேயர் ஷேக்ஸ்பியரை மதிப்பது போலவும், வட இந்தியர் துளஸிதாஸை ஓதுவது போலவும், நம் கவிக்கதிரான பாரதியாரை மதித்துப் போற்றுங்கள்! பெண்மணி காள், உங்கள் விடுதலைக்காகப் பாடுபட்டார் வரகவி! என்ன கைம்மாறு செய்யப் போகிறீர்கள்! நாள் தோறும் வீட்டில் பாரதி பாடல்களைக் காலை மாலை பாடுங்கள்! நாட்டுச் சீதேவிகாள், அந்தியில் விளக் கேற்றியதும் பாரதியாரின் பக்திப் பாடல்களை யாழுடன் பாடுங்கள்; வீட்டிற்கு மங்களமுண்டாகும்! தாய்மார்காள், உங்கள் குழந்தைகளுக்குப் பாரதி பாடலைச் சொல்லித் தருவதே முதற் படிப்பாகக் கொள்ளுங்கள்! மணப்பெண்களுக்குப் பாரதி பாடலை ஸ்ரீதனமாகக் கொடுங்கள். நாளுங்கிழமை எது வந்தாலும் பாரதி பாடலைப் பாடுங்கள், ஆடுங்கள், மனங்குளிருங்கள்! இளந் தமிழ்நாட்டீர், பாரதியைச் சாமானியமான தேசீய கவி அல்லது ஏதோ ஒரு கவி என்று மதிக்காதீர்கள் "புதுத் தமிழ்நாட்டுத் தீர்க்கதரிசி" என்று போற்றுங்கள்! தோலை அல்ல, ஆளை அல்ல, அந்த மஹா சக்திக் கனலை, நாதவடிவான அந்த வாக் சக்தியை பாரதி பாடல் களுக்குத் திரு நாள் நடத்துங்கள்!

"தேனை மறந்திருக்கும் வண்டும்—ஒளிச்
சிறப்பை மறந்துவிட்ட பூவும்

வானை மறந்துவிட்ட பயிரும்—இந்த
வைய முழுதுமில்லை, தோழீ"

பாரதியை மறந்து தமிழ்நாடு இருக்க முடியுமா? முடியுமா? பாரதி பிறந்த எட்டையபுர வீட்டை அழகிய பாரதி விலாசமாக்கி, அங்கே பாரதி பாடல்களைக் கற்றுக் கொடுக்க ஏற்பாடு செய்யவேண்டும். பாரதியாருக்குச் சென்னையில் நிலையான மாளிகை கட்டி, அங்கே காலைமாலை பாரதி பாடல்களை ஓதச் செய்யுங்கள். இப்போதும் இனியும் நமது தமிழ் நாட்டில் விளங்கும் நல்ல கவிகளைக் கேட்டு ஆதரிக்க அங்கே வழி செய்யவேண்டும். பாரதியின் பெயரால் தமிழரெல்லாம் ஒன்று கூடி, வர்ணப் படங்களுடன் "பாரதிச் சுடர்" என்ற ஒரு பத்திரிகை தோற்றுவிக்க வேண்டும். இளந்தமிழும், அன்பும், அறிவும் வீரமும், ஆற்றலும், அருங்கலையும் ஆத்ம ஞானமும் செழிக்க அந்தப் பத்திரிகை தமிழ் நாட்டில் பரவ வேண்டும். பாரதியார் குடும்பத்திற்குத் தக்க இடத்தில் ஒரு நல்ல வீடும் நிதியும் கொடுத்து ஆதரிக்க வேண்டும்; அக் குடும்பத்தில் பிறந்த குழந்தைகளுக்கும் தமிழர்செலவில் கல்வி புகட்டவேண்டும். பாரதியார் பாடல்களை ஹிந்தி, உருது, தெலுங்கு, மலையாளம், கன்னடம், மராட்டி, வடமொழி முதலிய சுதேச மொழிகளிலும், ஆங்கிலம், பிரெஞ்சு, ஜர்மனி, இதாலி, ஜப்பானியம், சீனம் முதலிய பிறமொழிகளிலும் தக்காரைக்கொண்டு மொழிபெயர்த்து வெளியிட வேண்டும். பாரதி விளக்கத்தைப் பல

மொழிகளிலும் எழுதி வெளியிடவேண்டும். பாரதி ஜயந்தியைத் தமிழர் ஜாதீய உத்சவமாகக் கொண்டாட வேண்டும். பொங்கல் தீபாவளிபோன்று, அன்று வீடுதோறும் மகர தோரணம் கட்டி, மங்கலமாக இருக்கவேண்டும். அன்று பாரதி நூல்களைப் படிக்க வேண்டும்; கல்யாணம் கார்த்திகைகளில் பணக்காரர் பூரிதக்ஷிணைகள் கொடுப்பதுபோல, பாரதி நூலை வாங்கி, வருவோருக்கு விநியோகம் செய்யவேண்டும். இப்படிப்பட்ட கவிகள் அபூர்வமாகவே உலகிற்கு வருவர். அதிலும் நம் கவிக்குயிலின் அற்புதம் சொல்லி முடியாது!

## கவிக்குயில் வாழ்த்து

1

புல்லடி மைப்பட்ட மாந்தர்க்கு—சுய
புத்தி வரச்செய் தெழுப்பினன்.
வெல்வலி யற்றுத் தளர்ந்தவர்க்—கொரு
வீரக் கனலினை மூட்டினன்.
பல்சமயச் சாதி வேற்றுமை—யாலே
பாழ்பட்ட பாரத நாட்டிற்கே
சொல்வலி வாற்சம தர்மத்தைத்—தூண்டிச்
சோகந் தவிர்த்தனன் பாரதி!

2

பண்டிதர் கொண்ட தமிழினை—நாட்டில்
பாமரரும் பெறச் செய்தனன்.
பெண்டி ரடிமையைத் தீர்த்தனன்—வெறும்
பேச்சினிற் காலத்தைப் போக்கிய

வண்டரை எள்ளி நகைத்தனன்—நாட்டை
வன்பணி செய்திட ஊக்கினன்
தொண்டிவன் சொத்தைத் சொல்லவோ—கவி
தோற்றின னிங்குப் புதுயுகம்!

3

தீரன், அறிவிற் சிறந்தவன்—புது
தீர்க்க தரிசி வரகவி;
வீர சுதந்திர சக்தியே—இவன்
வேடம் புனைந்திங்குப் பாடிற்று!
பாரி லதிசயம் பாரதி—அவன்
பண்களை வேதமென் றோதுவாம்
வாரிதி சூழுல கெங்கிலும்—நீடு
வாழ்க கவிக்குயில் வாழ்கவே!

இந்த எளிய உள்ளன்புக் காணிக்கையை என் அன்பிற்குரிய கவிக்குயிலின் வீராவேச வாணிக்கு அர்ப்பணிக்கிறேன்.†

ஓம் சக்தி!

சுத்தானந்த பாரதி

---

† பாஞ்சாலி சபதத்தை," தற்காலம் அரங்கிற்கும் பேசும் படக்காட்சிக்கும் (Talkie) ஏற்றவாறு நாடகமாக எழுதித் தனியாக வெளியிட விரும்புவதால் இந்நூலில் அதைப்பற்றிச் சில குறிப்புக்களே தந்தோம்.

